உள்ளே...

# உள்ளே...

உள்ளே...


**சிறுகதை**

ஆ. ஆனந்தன் 4
எஸ். சங்கரநாராயணன் 14
சுரேஷ் பரதன் 24
பொன். திருஞானமூர்த்தி 32

**கட்டுரை**

நிவேதிதா லூயிஸ் 10
பெ. புருசோத்தமன் 36

**கவிதை**

கா. அமீர்ஜான் 9
ஜெயதேவன் 19
சந்திரா மனோகரன் 20
கண்ணன் புலமி 20
பாப்பாக்குடி இரா. செல்வமணி 21
அய்யாவு பிரமநாதன் 22
ஆதியோகி 22
ம. சக்தி வேலாயுதம் 23
பா. தென்றல் 23
ஜி. அன்பழகன் 29
து.வி. அன்பழகன் 30
தமிழ் உதயா 30
தளவை இளங்குமரன் 31
செ.ச. பிரபு 35
ப . தாணப்பன் 35
கீர்த்தி 40
அந்தோணிராஜன் 40

**மேலும்...**

சுண்டல் பக்கம் – சுப்ரா 41







# காணிநிலம்

தனி இதழ்: ₹25

சொல் விளையும் பூமி

• அக்டோபர் - டிசம்பர் 2018 • இதழ் : 4 • தனிச்சுற்றுக்கு மட்டும்


**ஆசிரியர் குழு**

- சுப்ரா
- இரா. நாறும்பூநாதன்
- எம்.எம். தீன்
- சண்முகம்
- இரா. செல்வமணி
- ப. தாணப்பன்
- சங்கரராமன்
- ரமணி முருகேஷ்
- சக்தி வேலாயுதம்
- செ.ச. பிரபு


**தொடர்புக்கு:**

ஆசிரியர் குழு
காணிநிலம் இலக்கிய இதழ்,
29, 'தமிழ் அகம்' வி.ஐ.பி. நகர்,
தியாகராஜ நகர்,
திருநெல்வேலி – 11,
அ.எண் – 627 011.
அலைபேசி எண்
94423 28085, 94421 12763
kaaninilam2018@gmail.com
 காணிநிலம்



▪ இதழ் வடிவமைப்பு: டிசைன்ஷாப், 76677 55673.


வணக்கம்,

காணிநிலம் இதழ் 4 உங்கள் கைகளில் தவழ்கின்றது – ஓராண்டை நிறைவு செய்யும் இந்த மகிழ்வான தருணத்தில் ஆதரவளித்த வாசகர்களுக்கும், படைப்புகளை அளித்து உதவிய படைப்பாளிகளுக்கும் 'காணிநிலம்' தனது நன்றிகளை காணிக்கையாக்குகிறது.

ஓராண்டு நிறைவு செய்ததைக் கொண்டாடும் விதமாக 'காணிநிலம்' ஒரு சிறுகதைப் போட்டியை அறிவிப்பதில் மகிழ்ச்சி அடைகிறது. (விபரங்கள் பின்அட்டையின் உள்பக்கம்).

இன்னொரு வேண்டுகோளையும் 'காணிநிலம்' தன் வாசகர்களுக்கு முன் வைக்கிறது. முதல் இதழ் முதலாகவே ஓராண்டு சந்தா அளித்த வாசகர்களின் சந்தா இவ்விதழுடன் முடிவடைவதால், சந்தாவை புதுப்பித்து தொடர்ந்து காணிநிலத்தோடு பயணிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

–ஆசிரியர் குழு

**பெருமையும், உரிமையும் படைப்பாளிக்கே...**

| சந்தா விபரம் | | |
|---|---|---|
| | ஆண்டுச் சந்தா | ₹100/- |
| | ஈராண்டுச் சந்தா | ₹200/- |
| | ஐந்தாண்டிற்கு | ₹500/- |
| | ஆயுள் சந்தா | ₹1000/- |

வங்கி மூலம் பணம் செலுத்த:
A/C Name. Thanappan P.
A/C No. 119010100045727
IFSC CODE ANDB0001190
ANDHRABANK. TIRUNELVELI.

சிறுகதை «  » ஆ.ஆனந்தன்

# விழிப்பு

மேலே மின் விசிறி மிதமான வேகத்தில் சுற்றிக் கொண்டிருந்தது.

அதற்கு நேர் கீழே கலியமூர்த்தி ஈஸிச்சேரில் படுத்திருந்தார். காற்றின் அசைவுகளில் அடுப்பாங்கரையில் சமைத்து வைத்திருந்த சமையலின் மணம் வந்து வந்து போனது. பெருமாள் கோவில் மடப் பள்ளியைக் கடக்கும் பொழுது இப்படி சில சமயம் மணம் வருவதுண்டு, இன்றைக்கு பெருமாளுக்கு புளியோதரையா, பொங்கலா என்பதை முடிவு செய்ய முடியாத மணமாக இருக்கும் அதுபோல சைவச் சாப்பாடா அசைவச் சாப்பாடா என்றும் இனம் கண்டு கொள்ளமுடியாத ஒரு மணமாக இருந்தது.

கண்களை மூடிக் கொண்டு கலியமூர்த்தி படுத்திருந்தார். நல்ல கருத்த நிறம், கால்களும் கைகளும் நல்ல உருட்டுக் கட்டைகளைப் போல திரண்டு இருந்தன. எட்டு முழ வேஷ்டி முழங்கால் வரை உயர்த்தி விடப்பட்டிருக்க முழங்காலுக்கு கீழே இரண்டு கால்களும் காத்தாட கிடந்தன. எங்கு உட்கார்ந்தாலும் ஆடிக் கொண்டேயிருக்கிற கால்கள் இன்று ஆடாமல் அசையாமல் கிடந்தன. கைகள் இரண்டையும் தலைக்குப் பின்னால் தலையணையைப் போல முட்டுக் கொடுத்து வைத்துக் கொண்டு கண்களை மூடிப் படுத்து கிடந்தார். எப்பொழுதும் தோளில் தொங்கும் கரை போட்ட வெள்ளைத் துண்டு ஈஸிச்சேருக்குப் பக்கத்தில் இருந்த ஸ்டூலில் அரைகுறையாக மடித்து வைக்கப்பட்டிருந்தது, பக்கத்திலேயே ஒரு சொம்பில் தண்ணீரும், சில மாத்திரைப் பட்டிகளும். சுவரில் மாட்டப்பட்டிருந்த படங்களில் மகன் மகள் பேரன் பேத்தியென வரிசை கட்டிக் கொண்டிருந்தார்கள். ஒரே ஒரு படத்தில் மட்டும் கலியமூர்த்தியும் வேலம்மாவும். படத்தில் இடது புறம் வேலம்மாவும் வலது புறம் மூர்த்தியும், கலியமூர்த்தியின் பார்வையில் ஒரு கர்வமும் வேலம்மாவின் பார்வையில் ஒரு கனிவும் இருந்தது. நகைகள் அதிகம் இல்லாமல் இருக்கும் அந்தப் படம் கொஞ்சம் கூட வேலம்மாவுக்குப் பிடிக்காது ஆனால் கலியமூர்த்திக்கு தான் நன்றாக இருப்பதாகத் தோன்றியதால் அந்தப் படம் அவருக்கு மிகவும் பிடிக்கும். வேலம்மாள் இன்னும் கொஞ்சம் சிரித்தாவது இருக்கலாம் என நினைத்துக் கொள்வாள். வேலம்மாவுக்கு பிடிக்காவிட்டாலும் அது மகன், மகள் எல்லோர் வீட்டிலும் அந்தப் படம்தான்.

அந்தப் படம் மற்ற படங்களை விட கொஞ்சம் பளிச்சென இருந்தது. அது கொஞ்ச நாட்களுக்கு முன்னால் எடுத்ததாக இருக்கவேண்டும். சின்னவன் லீவுக்கு வந்திருந்த போது கட்டாயப் படுத்தி எடுத்த படம். இந்த நாற்பத்தொன்பது கால திருமண வாழ்க்கையில் அவர் வேலம்மாள் கூட போட்டோ எடுத்துக் கொள்ளவேண்டும் என நினைத்தது கூட இல்லை. வேலம்மாளும் வாய் விட்டுக் கேட்டதில்லை.

தெருவில் பதனீர் விற்கிறவரின் நீண்ட குரலும், கீரைக்காரியின் கீச்சுக் குரலும் தெருமுனை போய் தேய்கிறவரை கேட்டுக் கொண்டிருந்தது. பக்கத்து வீடுகளில் அடிகுழாயில் தண்ணீர் அடிக்கிற சத்தம் ஒரு தாள லயத்தோடும், இடை இடையிடேயே ரேடியோ பாடல்களும் கேட்டுக் கொண்டிருக்க ஒரு பேரமைதி நிலவிக் கொண்டிருந்தது. அது ஒரு வளசல் மாதிரியான வீடு, முதல் வீட்டில் வேலம்மாவும் மூர்த்தியும் இருக்க பின்னால் நாலைந்து குடித்தனங்கள் குடியிருக்கிறார்கள். மூர்த்தி படுத்து கண்ணை மூடிக் கொண்டிருந்ததால் நடை வழியாக தாண்டிப் போகிறவர்களெல்லாம் அய்யா தூங்குகிறார் என்று சத்தம் வராமல் நடந்து போனார்கள்.

வேலம்மாள் கலியமூர்த்தியின் காலடியில் அமர்ந்து தலையை கவிழ்த்தி கொண்டு அவரின் வலது காலை இலேசாக வருடிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். இடது காலை விட வலது கால் சற்று வீங்கி இருந்தது கூர்ந்து கவனித்தால்தான் தெரியும். பெருவிரலுக்கு சற்று மேலேயும் கணுக்காலில் பின்புறமும் சற்று வீங்கி இருந்தது. தேங்காயெண்ணையில் மஞ்சள் கலந்த கலவை ஒரு கிண்ணத்தில் இருக்க வேலம்மாள் கலவையை தொடுவதும் பாதத்தை நீவி விடுவதுமாக இருந்தாள். இருவரும் பேசிக் கொள்ளவில்லை.

இனி பேசுவதற்கு என்ன இருக்கிறது என்பது போல இருவரும் அவரவர் வேலையை அவரவர் பார்த்துக் கொண்டு இருந்தார்கள். பேசிப் பேசித்தான் என்னத்த கண்டோம் என்பது போலத்தான எல்லோரும் இருக்கிறோம். பேசிக் கொண்டேயிருப்பவர்களெல்லாம் எல்லாவற்றையும் பேசியவர்கள் கிடையாது பேசாதவர்களெல்லாம் எல்லாவற்றையும் மறைத்தவர்களும் கிடையாது. கலியமூர்த்தி கண்களை மூடி எதை நினைத்துக் கொண்டிருந்தாரோ, வேலம்மாள் அமைதியாக காலை நீவிக் கொண்டிருந்தாள். தனது காலடியில் விழுந்து கிடக்கும் மனுஷியைப் பற்றிய லட்சியமே இல்லாமல் நாள் முழுவதும் இப்படியே இருப்பது என முடிவுடன் இருப்பது போல இருந்தது அவரின் கண் மூடலும் வாய் பேசாமையும்.



மூர்த்திக்கு திருமண நாள் முதல் இப்படித்தான் எதிலும் ஈடுபாடே இல்லாதது போல் இருப்பார். ராத்திரி நேரத்தில், எல்லாம் தண்ணியக் குடிச்சுட்டு செம்பக் கவுக்கிற மாதிரிதான் என்பது வேலம்மாவின் ஆதங்கம்.

கலியமூர்த்தி இப்படியெல்லாம் வீட்டில் அடைந்து கிடக்கிறவர் கிடையாது. காலையில் குளித்து வெள்ளை வேஷ்டி வெள்ளை சட்டை தோளில் தொங்கும் கரை போட்ட வெள்ளைத் துண்டோடு வெளியே கிளம்பினார் என்றால் மதியம் மூன்று மணிக்குத்தான் சாப்பிட வருவார். அவரும் அவர் வயதொத்த நண்பர்களும் கூடுவதற்கும் பேசிப் பேசி பொழுதை கழிப்பதற்கும் பெருமாள் கோவில் தேருக்குப் பக்கத்தில் கடை வைத்திருக்கும் ராமர் பிள்ளையின் பேப்பர் கடைதான்.

காலை ஆறு மணிக்கு கடையைத் திறக்கிற ராமர் பிள்ளை பத்து மணி வரை அன்றைய தினசரி பேப்பர் விற்பனையை கவனித்துக் கொண்டிருப்பார், பிறகு சகாக்கள் வந்த பிறகு கடையைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு போய் குளித்து சாப்பிட்டு வந்துவிட்டால் மீண்டும் கடையை மூன்று மணிக்கு மூடி விட்டு எல்லோரும் சாப்பிடப் போவார்கள்.

கடையிலிருந்து பத்து எட்டு நடந்தால் பெருமாள் கோவில் தேர் நிற்கும். கடை வாசலில் செக்கானூரணியிலிருந்து அதிகாலை கிளம்பி வந்து வெள்ளரிக்காயும் கம்மா கத்திரிக்காயும் குவித்து வைத்து வியாபாரம் நடக்கும். கடைக்குப் பின்புறம் இருந்த செக்கிலிருந்து கடக் கடக் என விநோதமான சப்தம் அவ்வப்பொழுது வந்தவண்ணம் இருக்கும்.

ராமர் பிள்ளையின் அப்பா காலத்திலிருந்தே இருக்கிற கடைதான். இன்று அது பேப்பர் கடையென்றாலும் ஒரு காலத்தில் கடையில் வாரப் பத்திரிகைகளும், பெருமாள் கோவில்

தேவைக்கேற்ப கற்பூரம், ஊதுவத்தி, குங்குமம், மஞ்சள், சந்தனம் சில நேரங்களில் வாழைப்பழங்களும் விற்றதுண்டு. கொஞ்ச காலம் சிகரட் கூட இருந்தது, யாரோ சொன்னார்கள் என்று ராமரின் அப்பா அதை மட்டும் உடனடியாக நிறுத்திவிட்டார். ஒண்டி புலி நன்னாரி சர்பத் ராமரின் அப்பா கை பக்குவத்தில் பலருக்கு பிடித்த பானமாக இருந்ததும் உண்டு. ஒரு சின்ன டைப் ரைட்டிங் மிஷின் வைத்துக் கொண்டு சில காலம் டைப் கூட அடித்துக் கொண்டிருந்தார் என்பார்கள். கொஞ்ச காலம் சோடா மிஷின் வைத்து சோடா அடித்துக் கொடுத்துக் கொண்டிருந்ததாகவும் அது ராமருக்குக் கூடத் தெரியாது என்றும் பலர் சொல்வார்கள். அது ஒரு அலுவலகம் போல இருந்தாலும் பேப்பர் கடை பேப்பர் கடை என்றே ராமர் பிள்ளையின் அப்பா காலத்திலிருந்து சொல்லி சொல்லியே இன்று அது வெறும் பேப்பர் கடையாகிவிட்டது. ராமரும் பேப்பரும் சில வாரப் பத்திரிகைகளும் போதும் என்று நினைத்துவிட இன்று அது வெறும் பேப்பர் கடை தான்.

கடைக்கு இரண்டு வீடு தள்ளி தெருவில் கட்டப் பட்டிருந்த பசு மாடு மா மா என்று இழுத்து இழுத்து கத்திக் கொண்டே இருந்தது. ராமர் பிள்ளையும் கனகவேலும் பசு மாட்டின் குரலைப் பார்த்து அர்த்தத்துடன் சிரித்துக் கொண்டனர்.

இன்றைக்கு பதினோரு மணி ஆகியும் கலியமூர்த்தி வராதது இருவருக்கும் என்னவோ போல் இருந்தது. மூர்த்திதான் மூவரில் அதிகம் பேசுவதும், எதையாவது சொல்லி இருவரையும் சிரிக்க வைப்பதும், வெள்ளரி விற்க வருகிற பெண்களிடம் வம்பு இழுப்பதும் வாங்கிக் கட்டிக் கொள்வதுமாக நன்றாக பொழுது போகும். என்ன இன்னைக்கி வெள்ளையும் சொள்ளையுமா வந்திருக்கீங்க, எல்லாம் நீ பாப்பேன்னுதான். அட ஆசைப் பார்ரா மீசை வெள்ளையாயும் ஆசைக்கு ஒன்னும் குறைச்சலில்லை இப்படியாக பேச்சு போகும், கலிய மூர்த்தியிடம் பெண்கள் குழைவதும், சிரிப்பதும், செல்லக் கோபம் கொள்வதும் கலகலப்பாக இருக்கும். கிளட்ச் இல்லாமல் மூணு மணி பஸ் கிஷ்ஷ்ஷ்ஷ் என்ற சத்தத்துடன் கடையை தாண்டிப் போகும் பொழுதுதான் மூவருக்கும் பசி எடுக்கிற மாதிரி இருக்கும். வெள்ளரிக்காய்காரிகளும் வியாபாரம் முடிந்து கிளம்புகிற நேரமாகிவிடும்.

பேச்சு என்றால் மூர்த்தியும், ராமரும்தான். கனகவேல் ஒரு அமைதியான மனிதர், அதிகம் பேசமாட்டார். இவர்கள் வயதுதான் அவருக்கு என்றாலும் முகத்தில் தவழும் அமைதியும், முதிர்ச்சியும் அவரைப் பார்த்தால் ஒரு யோகியைப் போலத் தோன்றும். ஏதாவது பேசினாலும் சரியாகவும், சிந்தனையை தூண்டுவதுமாகவும் இருக்கும்.

பேச்சு வாக்கில் மூர்த்தி தனது சின்ன வயது விளையாட்டுகளையெல்லாம் சொல்வார். இவர்களும் கேட்டு அவரை உசுப்பேத்திவிட்டு மேலும் மேலும் கதை கேட்பார்கள்.

அப்படிப் பேச்சு வாக்கில் தான் மொட்டை மாடியில் உலாத்தப் போயிருந்தப் பொழுது தற்செயலாய் சந்தித்த பக்கத்து வீட்டு அம்மாவைப் பற்றிச் சொல்ல இருவரும் பிடித்துக் கொண்டார்கள். தினமும் தவறாமல் என்ன இன்னைக்கு என்ன செய்தி என கேட்டு கேட்டே மூர்த்திக்கும் நாள் தறாமல் மொட்டை மாடிக்கு போகிற பழக்கத்தை உண்டாக்கி விட்டார்கள். இதையும் ராமர்தான் கேட்பார், கனகவேல் ஒரு சிரிப்புதான் சிரிப்பார், அதுவே அவர் கேட்கிறமாதிரி ஆகிவிடும்.

ஒருநாள் முசக்குட்டி மாதிரி அவ மொசு மொசுன்னு என்னைப் பார்த்து சிரிச்சுகிட்டே நடந்து வரா பிள்ளைவாள், அவள் என்னப் பார்த்த பார்வை இருக்கே ராமர் இதுவரை இப்படியொரு பார்வையை நான் பார்த்ததில்லை. கைகளைக் கட்டிக் கொண்டு அவ நடந்து என் பக்கத்திலேயே வந்து என்ன நல்லா பார்த்தாச்சான்னு கேக்குறாய்யா நான் என்னத்த சொல்ல சிரிச்சுக்கிட்டே நின்னேன். உடனே சிரிச்சதுபோதும்ன்னு சொல்லிபுட்டு மொட்டை மாடிப் பக்கம் ராத்திரியேல்லாம் வர்றது இல்லையான்னு கேக்கிறாய்யா என்று ஏதோ சொல்லி விட அன்றிலிருந்து பிள்ளை இவரைப் பார்க்கும் பொழுதெல்லாம் என்ன முசக் குட்டி என்ன சொல்லுது, அதுக்கு பேரெல்லாம் கிடையாதா இல்ல எங்கிட்டயெல்லாம் சொல்லமாட்டீரா என்பார். இன்னொரு நாள் என்னய்யா மூர்த்தி உம்ம மொட்டைமாடி ஆளு என்ன சொல்லுது என்பார். கனகவேல் மட்டும் இரண்டு பேருக்கும் இளமை திரும்புதோ, அறுபது வயசில என்னய்யா உன் ஆளு என் ஆளுன்னு பேச்சு, பேரன் பேத்தி கேட்டா சிரிக்கப் போகுது என்பார். பாத்தமா பெருமூச்சு விட்டோமா போனமா இல்லாம ஆளாம் ஆளு, வீட்டில சோறு கிடைக்காமப் போகப் போகுது பாத்து என்பார்.

வழக்கத்துக்கு மாறாக மூர்த்தியின் வருகையில் அதிக தாமதமானதால் பிள்ளைவாளுக்கு இருப்புக் கொள்ளவில்லை. ஒருநாள் கனகவேல் இல்லாத சமயம் அவர் சொன்ன விஷயம்தான். சாயுங்காலம் எப்பொழுதாவதுதான் மூர்த்தி ராமர் கடைக்கு வருவார், அப்பொழுதெல்லாம் கனகவேல் வரமாட்டார். கடைக்கு முன்னால் வியாபார சந்தடியெல்லாம் இருக்காது. இருவருக்கும் பேசுவதைத் தவிர வேறு வேலையே கிடையாது. பிள்ளையும் மூர்த்தியும் தங்களது இளமை காலந் தொடங்கி இன்றைய அரசியல் வரை பேசிக் கொள்வார்கள். நடுவிலே அவ்வப்பொழுது பத்திரிகைகளில் பார்க்கிற சினிமா நடிகர் நடிகைகள் பற்றியும் பேச்சு திரும்பும்.

ஒரு நல்ல மழை நாளில் வேர்க்கடலையை கொறித்துக் கொண்டே மூர்த்தி பேசத்தொடங்கினார். ராமர் வேண்டாம் என்று சொல்லத்தான் நினைத்தார் ஆனால் விஷயம் அப்படி சொல்ல நினைத்ததை சொல்லாமல் மேலும் மேலும் கேட்கத் தூண்டும் விஷயமாக இருந்ததால் சொல்லாமல் விட்டு விட்டு கேட்டுக்கொண்டேயிருந்தார். நடு நடுவே ஏதாவது சொல்லத் தோன்றினாலும் இவரால் பேச முடியாதபடி கலியமூர்த்தி சொல்லிக் கொண்டேயிருந்தார். நடுவில் ஒரே ஒரு தரம் மட்டும் என்னய்யா வாயப் பொழந்துக்கிட்டு கேட்டுக்கிட்டு இருக்கீரு ஏதாவது சொல்லலாமில்ல என்றார்.

என்னத்த சொல்ல "யோவ் விதி கெட்டா மதி கெடும் மதி கெட்டா மனுஷன் கெடுவான்னு" பழமொழி இருக்கு பாத்துக்கிருதும் என்றார்.

எப்பொழுதாவது யாருமே இல்லாமல் இவர்கள் இருவரும் தனியாக இருக்க நேரிட்டால் வெள்ளரிக்காய் வியாபாரிகளிடம் கடையை பார்த்துகொள்ள சொல்லிவிட்டு இருவரும் அப்படியே நடந்து போய் முக்கில இருக்கிற டீக் கடையில் வடையும் டீயும் சாப்பிட்டுவிட்டு டீக் கடைக்காரரிடம் ஏதாவது வம்பிழுத்துவிட்டு வருவார்கள். அநேகமாக ராமர்தான் டீ, வடைக்கெல்லாம் பணம் கொடுப்பார். ஒருநாள் டீ குடித்துவிட்டு வரும் பொழுது என்னய்யா என்ன விஷயம் ஒன்னுமே சொல்ல மாட்டீங்க்ரீரு என்றார்,

"என்னத்த சொல்ல எல்லாம் நம்ம கையை மீறி போயிருச்சு, நல்லாத்தான் இருக்குய்யா என்றார்."



"பாத்து வீட்டில செருப்படி கிடைக்கிறதுக்கு முன்னால எல்லாத்தையும் விட்டுத் தொலையும், சாகப் போற சமயத்தில இதென்னய்யா வேண்டாத வேலை. நம்ம சுத்தி எல்லாம் நடக்கத்தான்யா செய்யும், ஒதுங்கிப் போகப் பழகிக்கணும், பாத்து, சொல்லறத சொல்லிப்புட்டேன் அப்புறம் உமக்குத் தெரியாததா என்றார்"

தொடர்ந்து மொட்டை மாடி சுவரெல்லாம் உயரம் குறையா இருந்தாலும் ஒரு நேரம் மாதிரி ஒரு நேரம் இருக்காது பாத்து என்று சொல்லிவிட்டு அத்தோடு அந்தப் பேச்சை பேச விருப்பமில்லாதவர் மாதிரி பேச்சை வேறு பக்கம் மாற்றிப் பேசிக் கொண்டே கடைக்குத் திரும்பி வந்தார்கள்.

கனகவேல் எப்பப் போவார் என்று காத்திருந்த மாதிரி வேக வேகமாக கடையைப் பூட்டிவிட்டு கலியமூர்த்தியை பாக்க கிளம்பினார் பிள்ளைவாள்.

ஈசிச்சேரில் கண் மூடிப் படுத்திருந்த கலியமூர்த்தி யாரோ வாசலில் செருப்பைக் கழட்டும் ஓசை கேட்டு கண் விழித்தார், வருவதை யாரென்று தெரிந்து கொண்டதும் நிமிர்ந்து உட்கார முயற்சி செய்கையில் தன்னையறியாமல் வலி பொறுக்க முடியாமல் அம்மா என்று முணங்கிவிட்டு, வாங்க வாங்க இப்படி ஏதாவது ஆனாத்தான் வீட்டுக்கு வருவீர், இல்லைன்னா நாங்கதான கடைக்கு வரணும் என்றார்.

"பரவாயில்ல பரவாயில்ல அப்படியே இருங்க மூர்த்தி, இப்ப என்ன நான் என்ன வரமாட்டேன்னா சொல்றேன் அங்கதான் நேரம் சரியாப் போயிருதே, உமக்குத் தெரியாததா" எனச் சொல்லிக் கொண்டே பக்கத்தில் இருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டார்.

அந்த அறையின் ஏதோ ஒரு பக்கமிருந்து இரண்டு நாள் காயாமல் போன ஈரத்துணியின் புழுங்கல் வாடை அந்த அறையை நிரப்பியிருந்தது. மூர்த்தியின் அப்பா படத்தில் போடப்பட்ட மாலையிலிருந்து காய்ந்த சில பூக்கள் விழுந்து கிடந்தன. கட்டிலுக்கு மேல் புறத்தில் சுவர்ப் பூச்சு உதிர்ந்து செங்கல் வெளியே தெரிந்து கொண்டிருந்தது. மின் விசிறியின் மெல்லிய ஓசை அந்த அமைதியை கொஞ்சம் கலைத்துக் கொண்டிருந்தது. ராமர் பிள்ளை மெதுவாக கனைத்துக் கொண்டார், அடுக்களைப் பக்கம் பார்த்தார் வேலம்மாள் இருப்பது கொஞ்சமும் தெரியவில்லை. மூர்த்தி பேசுவதாகத் தெரியவில்லை.

மூர்த்தி கொஞ்சம் அசைவது தெரிந்ததும், மூர்த்தி வாயைத் திறக்கும் முன்பே, சரி சரி எல்லாம் விளங்கீரிச்சு. பேசாமப் படும், என்றார்.

வேலம்மாள் வெளியே வரவுமில்லை, வாங்கன்னு கேட்கவுமில்லை. வழக்கமாக எப்பொழுதும் கேட்காமலேயே வரும் காப்பியும் வரவுமில்லை. மாத்திரைப்பட்டி, கால் வீக்கம் எல்லாவற்றையும் பார்த்து நிலைமையை ஒரு மாதிரி புரிந்து கொண்டு, பிள்ளைவாள் குரலைத்தாழ்த்தி "யோவ் அன்னைக்கே சொன்னேன் கேட்கல, இனிமேயாவது பாத்து நடந்திக்கிரும். வீட்டில முடிஞ்சா மன்னிப்புக் கேளுமையா ஒன்னும் தப்பில்லை, வீடுதான்யா அதாவது குடும்பந்தான்யா உலகத்தில சிறந்தது, இதெல்லாம் நான் சொல்லியா உமக்குத் தெரியணும், நீரே எல்லாருக்கும் புத்தி சொல்வீரு,பாத்து" எனச் சொல்லிக் கொண்டே செருப்பைப் போட்டுக் கொண்டே நான் வரட்டுமான்னு சொல்லிவிட்டு பதிலுக்குக் காத்திராமல் படியிறங்கி நடக்கத் தொடங்கினார்.

மீண்டும் வீட்டுக்குள் ஒரு பேரமைதி நிலவிக் கொண்டிருந்தது. மூர்த்தியும் கண்ணைத் திறக்க தைரியமற்றுப்போய் படுத்துக்கிடக்க வேலம்மாள் ஒரு வைராக்கியத்துடன் அடுப்பங்கரையில் தலை குனிந்து அமர்ந்திருக்க, ஒரு இழவு வீட்டைப் போல இருந்தது அந்தக் கூடம்.

எவ்வளவு நேரம்தான் அப்படி இருக்க முடியும், வேலம்மாள் அடுப்படியிலிருந்து சூடான வெந்நீருடன் வந்து மீண்டும் காலடியில் அமர்ந்து துணியை வெந்நீரில் முக்கியெடுத்து ஒத்தடம் கொடுக்க காலை தொட்டாள். காலை பின்னுக்கு இழுத்துக் கொண்ட மூர்த்தி

"வேலு, நேத்து ஒரு தடவதான், தப்புத்தான், என்னய....................

பேச்சை முடிப்பதற்குள் வேலம்மாள் விருட்டென்று எழுந்து, "நான் இரண்டு மாசமா தூக்கம் வராம முழிச்சுக்கிட்டுத்தான் கிடக்கிறேன்" என சொல்லிக் கொண்டே உள்ளே போனாள்.

முழங்காலிருந்து பாதத்திற்கு வடியும் தண்ணீரின் நம நமப்பு இலேசாக உறுத்த மூடிய கண்களைத் திறக்காமல் கலிய மூர்த்தி படுத்துக் கிடந்தார். •

» கா.அமீர்ஜான்

# ஒற்றைச் சொல்லின் தோகை...

ஒற்றைச் இலையிலிருந்து இருந்து
பிறிதொரு இலையாக
பரவி விரிய
கிளைகளின் துளிர்க்கும்
மரத்தின் சொற்கள்...

தளிர்களாகவும்
துளிர்களாகவும்
மரத்தின் சிறகுகளாக விரிக்கும்
இலைகளில் ஒட்டியிருக்கின்றன
காம்புகளில்
புதிது புதிதானச்சொற்கள்...

தெரிந்தும்
தெரியாமல் தான் இருக்கின்றன
இலைமறைக் காயெனக்
கனிந்திருக்கும் சொற்கள்...

அந்த
காய்ச் சொற்களில்
சிலது இனித்தப்படியும்
கனிந்த சொற்களில்
சிலதுகள் புளித்தபடியும் இருக்க
உச்சரிக்கவும் எழுதவும்
ஏற்றுக் கொண்டதில் சில
ஒதுக்கவும் செய்கிறது
மனம்...

பச்சையம் மிளிர
காம்புகளில் மொட்டரும்பு பூவென
காய்க் கனிகளாகக் குலுங்கி
நிழல் பரப்பி
பசியாற்றி
இளைப்பாற வைக்கின்றன
சொற்களின் மரம்.

நிழலில் இருந்து கொண்டு
பறித்துக் கொள்ள முயலும் போது
பசுமையாவும்
உதிர்க்கும் காற்றோடு
குளிர்
மேவுவதாகவும் இருக்கும்
சொற்கள்...

சிகரம் அமர்ந்த சொற்கள்
யவ்வனம்படுத்த
பேரொளியில் மின்னித்தெரிக்கும்
புவனத்தில்
புளங்காகிதம் கொண்டதில்
புனிதமாகும் ஒவ்வொரு சொல்லும்
மனம் வணங்க...



# குஜிலி – சாமானியனின் குரல்

சென்னை சென்ட்ரல் இரயில் நிலையத்தை அடுத்த தென்னக இரயில்வே தலைமையக அலுவலகத்தின் பின்புறம் இருக்கிறது அந்த நெரிசல் மிகுந்த தெரு- குஜிலி பஜார் தெரு. பெயரே கொஞ்சம் சிரிப்பை வரவழைத்தாலும், அந்தத் தெருவில்தான் ஒரு காலத்தில் "குஜிலி இலக்கியம்", "குச்சிலிப்பாட்டு" எனப்படும் ஓர் இலக்கிய வகை தோன்றி வளர்ந்தது என்பது பெரும் ஆச்சரியம். குச்சிலிகள் என்று அழைக்கப்பட்ட குஜராத்திகள் அங்கு பெருவாரியாக வசித்ததால் அந்தப் பெயர் வந்திருக்கலாம் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். ஈவினிங் பஜார் என்று அழைக்கப்பட்ட அந்தப் பகுதியில்தான் ஜேப்படி திருடர்கள் அதிகம்! கள்ளச்சாவிகளின் பிறப்பிடம் இந்தத் தெரு. வெற்றிலைக் காவிப்பற்கள் தெரிய சிரித்தபடி விலைமாதர்கள் நடமாடிய இடம். திருட்டுப்பொருள்கள் குறைந்த விலையில் விற்கப்பட்ட இந்த பஜார் நாளடைவில் தீவ்ஸ் பஜார் என்று பெயர் மாறி நின்றது. மதிமோச விளக்கம் என்ற நூலில், "சென்னையில் மோசங்களுக்குத் தாயிடம் குஜிலிக்கடை", என்று எழுதப்பட்டுள்ளது. தீவ்ஸ் பஜார் என்ற பெயரை ஒரு வழியாக முனிசிப்பல் கமிஷனர் மலோனி *1920*களில் "ஈவினிங் பஜார்" என்று பெயர் மாற்றம் செய்தார்.

சென்னையில் மட்டுமல்லாது, புதுக்கோட்டை, தூத்துக்குடி, நாகை, கும்பகோணம், நெல்லை போன்ற ஊர்களிலும் இந்த வகை பாடல் புத்தகங்கள் முக்கிய வீதிகளில் விற்கப்பட்டன. *1850*கள் துவங்கி, *1950*கள் வரை, சினிமாவின் தாக்கம் மக்களிடம் அதிகம் ஏற்படாத நூற்றாண்டில், இவ்வகைப் பாடல் புத்தகங்கள் மக்களுக்கு பெரும் பொழுதுபோக்காய் அமைந்தன. அப்போது செய்தித்தாள்களும் குறைவு. ஏதாவது ஒரு நிகழ்வு நடந்ததும் ஒரு பாட்டு பாடி, புத்தகம் போடுவது இந்த 'கவீ'களின் வழக்கம். பாடல்எழுதியவர்களே இவற்றை அச்சடிக்கும்முதலாளிகளாகவும் இருந்துள்ளனர்.

இவ்வகைப் பாடல் புத்தகங்கள் எழுத பெரிய இலக்கிய நயமோ, கவிதைச் சுவையோ தேவைப்பட்டிருக்கவில்லை. ஏகலைவன் போல, இதற்கு முன்னால் ஒரு புத்தகம் எப்படி இருந்ததோ, அதைப்பார்த்து அதைப்போலவே இன்னொன்று எழுதி விட்டார்கள் கவிஞர்கள். வெங்காய சருகு போல மட்டமான தாள், அதில் தப்பும் தவறுமாக அச்சேறிய பாடல்கள் என மோசமான புத்தகங்களுக்கு எடுத்துக்காட்டாகவே இருந்தாலும், மிக முக்கியமான வரலாற்றுத்தகவல்களை அள்ளித் தருகின்றன இந்த நூல்கள்.

## குஜிலி புத்தகம்

முதன்முதலில் தென்னிந்தியாவில் ஓடிய இரயில், முதல் பறக்கும் கண்காட்சி, கிண்டி ரேஸ், இரயில்வேத் துறை ஸ்ட்ரைக், தாது வருஷப்பஞ்சம், பீப்பிள்ஸ் பார்க் தீ விபத்து, ஆர்பத்னாட் வங்கி திவால், டிராம் வண்டி, எம்டன் கப்பல் குண்டு வீசி தாக்கியது என அந்த காலத்தின் மிக முக்கிய சம்பவங்களை நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்தி விடுகின்றன பாடல்கள். வரலாறு என்று ஆங்கிலேயன் எழுதிய ஏதோ ஒன்றைத் தான் இன்றளவும் வரலாறு என்று படித்து வந்திருக்கிறோம். ஆனால், நம் முன்னோர்கள் வாழ்க்கையை அணுகிய விதம், அவர்களது மகிழ்ச்சி, துக்கம் எல்லாவற்றையும் நமக்கென பதிந்து வைத்துவிட்டுச்சென்றிருக்கிறார்கள் இந்தப் பாடல்கள் வடிவில். பாடல் என்றதும் ஏதோ ஏனோ தானோபாடல்கள் என்று எண்ணிவிட வேண்டாம் - சிந்து, நொண்டி நாடகம், கும்மி, பதம், சம்வாதம் என்று அழகாக இலக்கண சுத்தமாக எழுதப்பட்டவை. விருத்தமாகப் பாட சில, சந்தத்துடன் பாட சில, ராகம் தாளத்துடன் சில என்று பாடக்கூடிய வகையில் எழுதப்பட்ட பாடல்கள் இவை. விஜயபுரம் சபாபதி, பீர்முகம்மது ராவுத்தர், தூளை முனுசுவாமி, சிறுமணவூர் முனுசுவாமி, ஆர்.பி.எஸ். மணி, கே.ஏ. மதுரை, நாகை சுவாமினாதன்- போன்றவர்கள் இவற்றை அச்சிட்டவர்கள், இயற்றியவர்கள்.

மக்கள் கூடும் இடங்களில் இந்தப் புத்தகங்களை கூடைகளில் வைத்து, பெரும் குரலில் ஆண் ஒருவர் பாடி, பாதியில் நிறுத்த, மீதி கதை அறிய வேண்டுமா, புத்தகங்களைவாங்குங்கள் என்று பெண் ஒருவர் விற்கத் துவங்க, அமோகமாக வியாபாரம் நடந்திருக்கிறது. திருச்சியில் இன்றும் நடுகுஜிலித் தெரு உள்ளது. *1856*ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஒன்றாம் தேதி தென்னிந்தியாவின் முதல் இரயில் ராயபுரம் இரயில் நிலையத்தில் இருந்து ஆம்பூர் வரை சென்றது. சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இந்த நிகழ்வு பற்றிய கட்டுரையை, இல்லஸ்டிரேட்டட் லண்டன் நியூஸ்என்ற இங்கிலாந்தின் செய்தித்தாள் செப்டம்பர் *6, 1856* அன்று வெளியிட்டது. நம் பாட புத்தகங்கள், ஆங்கிலத்தில் எழுதப்பட்ட வரலாற்றுப் புத்தகங்கள் போன்றவை மேற்கோள் காட்டி தென்னிந்தியாவின் முதல் இரயில் பற்றிகூறுவதன் மூலம் இந்தக் கட்டுரைதான்.



*"300* ஐரோப்பியர்கள் ராயபுரம் இரயில் நிலைய நடைமேடையில் இருந்த முதல் இரயிலில் ஏறத் துவங்கினர். மிடுக்காக உடையணிந்த ஆண்களும், பெண்களும், சாண்டலியர்கள் ஒளிரும், பெரிய பங்காக்கள் கொண்ட அழகிய நிலையத்தின் முன் நின்றனர். அந்தப் பெண்கள் அணிந்திருந்த வெளிர் நிறகவுன்களுக்கு அப்படியே எதிர்ப்பதமாக, பக்கத்து இரயிலில்பிதுங்கி வழிந்த இந்தியர்களின் கருப்பு நிறம் தெரிந்தது... முதல் இரயில் ஆங்கிலேயர்களுடன் 65 மைல்களுக்கு அப்பால் உள்ள ஆம்பூர் வரை சென்றது. இரண்டாவது இரயில், இந்தியர்களை ஏற்றிக்கொண்டு திருவள்ளூர் வரை சென்றது. இரயில் வருவதை தூரத்தில் பார்த்த ஆடு மாடுகள், பயந்து சிதறி ஓடின. வயல்களில் இருந்த இந்தியர்களும், கரிய நிற பேய் என்று இரயிலைப் பார்த்து பயந்து ஓடி ஒளிந்தனர்"- இப்படிப் போகிறது முதல் இரயிலின் வர்ணனை.

## இல்லஸ்டிரேட்டட் லண்டன் நியூஸ்- ராயபுரம் இரயில் நிலையம்

*1925*ஆம் ஆண்டு வெளிவந்திருக்கிறது "ராயபுரம் கடக்கால் கும்மி" என்ற குஜிலிப் புத்தகம். சென்னை திருவொற்றியூர் ராமானுஜர் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்ட இந்த பாட்டு, என்ன சந்தத்தில் பாடப்பட வேண்டும் என்ற குறிப்புடன் இருக்கிறது.

நன்னே நன்னா நானே நன்னா
நன்னா நானே நானே நன்னே நன்னா நானே- என்ற சந்தம்
சென்னைப் பட்டணமெனும் கெடிஸ் தலத்தில்
தன்னாலே ரெயில் போட ராயபுரத்தில்
ராயபுரத்தில் ரயில் ரோட்டுப் போட
நவாப்பு கெவுனர் செனல் மேஜரும் கூட
கர்னல் துரைசிப்பாயி துருப்புதானே
சேர்ந்தார் போலீசு துரை சேவகனுடனே
வேட்டுவர் போட்டார்கள் இருபத்து ஒண்ணு
பட்டாளம் துருப்பு ரயில் செய்தார் நிண்ணு
சிறந்த இஞ்சினீயர் ஓடி கொடி பிடிக்க
இருந்த இஞ்சினீயர் நிலம் அளந்தார் நெடுக்க
மண்ணை பொன் மண்வெட்டியால் நவாப்பு வெட்ட
மண்ணையேந்தி கெவுனர் சுமந்து கொட்ட
நவாப்புக் கையால் முகூர்த்தம் செய்துவிட்ட பின்
அப்போது சாதுர்யமாக வேலைக்காரர்கள்

சட்டமாய் நிலத்தில் மரம் பரப்பி வைத்து
திட்டமாய் இரும்பு சட்டம் சாயாமல் வைத்து
புகைவண்டி கிரிசையோடு ஆறுசக்கரம்
வகையுடன் பின் வண்டிக்கி நாலு சக்கரம்
வண்டியின் மேல் அனல் போட ஆனையைப் போல்
ஒண்டி குழை போக வைத்ததின் மேலே
தொட்டி வைத்து தண்ணி ரொப்பி அனல் மூட்டி
பொட்டி வண்டி சாமான் வண்டி பின்னாலே பூட்டி
புகை போட்டுச் சாவிக்கொண்டு ஆள் முடுக்க
திகைத்திடும்படி சத்தம் கீச்சென்று எடுக்க
ஓடுது பார் ரயில் போகுது பார்

*இப்படிச் சொல்கிறது குஜிலிப்பாட்டு! முகூர்த்தம் செய்வது முதல், முதல் வண்டிதுதிக்கை கொண்ட ஆனை போல ஓடுவது வரை, அவன் செய்த பணிகளையும், இரயிலை அவன் பார்த்த விதத்தையும் சொல்லிச் சென்றிருக்கிறான் சாமானியன் ஒருவன்! இதுதானே நம் வரலாறாக இருக்க முடியும்?*

*1877ஆம் ஆண்டு தென்னிந்தியா வரலாறு காணாத பஞ்சத்தை சந்தித்தது. "தாது வருஷப் பஞ்சம்" என்பது இன்றும் முதியவர்கள் பலர் செவிவழி கேட்டு நினைவில் வைத்திருக்கும் கொடும் பஞ்சம். இரண்டே ஆண்டுகளில் 5 மில்லியன் தென்னிந்தியர்கள் அன்றைய மதராஸ் மாகாணத்தில் மாண்டு போனார்கள். ஆனால் அந்த ஆண்டுகளில் 32 மில்லியன்டன் உணவு தானியங்களை இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்தது இந்தியா! அப்போதைய கவர்னர் ஜெனரல் லார்டு லிட்டன், "எந்த விதத்திலும் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி குறையாமல் பார்த்துக் கொண்டார்", என்று பதிவு செய்கிறார் "லேட் விக்டோரியன் ஹோலோகாஸ்ட்ஸ்" என்ற புத்தகத்தை 2001ஆம் ஆண்டு எழுதிய ஆங்கிலேயரான மைக்டேவிஸ். பஞ்ச காலத்தில் இங்கு துணை ஆளுனராக இருந்த ரிச்சர்டு டெம்பிள், பஞ்சத்தை முன்னிட்டு, சம்பளக் குறைப்புக்கு உத்தரவிட்டார். ஒரு நாள் முழுக்க வேலை செய்த ஆண்களுக்கு 450 கிராம் அரிசியும், ஓரணா பணமும் நாள் முடிவில் தரப்பட்டது. "டெம்பிள் சம்பளம்" என்ற இந்தஊதியத்தைக் கொண்டு தான் உயிர் வளர்த்தனர் இந்தியர்கள். கால்வாய்கள் வெட்டவும், சாலைகள் போடவும் இந்தியர்கள் அடிமாட்டு ஊதியத்துக்கு வேலை செய்வதை 1907ஆம் ஆண்டு வெளிவந்த "இம்பீரியல் கசட்டியர்" பதிவு செய்கிறது. அப்படி பஞ்சகாலத்தில் தோண்டப்பட்டதுதான் சென்னையின் முக்கிய நீர்த்தடமான பக்கிங்ஹாம் கால்வாய்!*

## 1877ஆம் ஆண்டு கிராஃபிக் பத்திரிகை வெளியிட்ட மதராஸ் பஞ்சம் படம்

*அதே ஆண்டு வீரபத்திரமுதலியார் "தாது வருஷத்திய பஞ்சத்தின் கும்மி" என்ற குஜிலிப் பாடலை எழுதுகிறார். கண்முன் தன் சொந்தமக்கள் செத்து விழுவதை பொறுக்காது அவர் எழுதிய பாடல் இதோ-*

கொட்டி கிழங்கு கிட்டிக் கிழங்கும் கொஞ்சமும் கூட
அகப்படலே
மட்டுப்படாத இந்தக் கருப்பினில் வயிறு வளர்ப்போம்
வாங்களடி
முஷ்டக்கீரையும் மின்னக்கீரையும் முருங்கக்கீரை
அகப்படலே
கஷ்டப்பட்டு நாமும் இந்தக் கருப்பினில்
காலங்கழிப்போம் வாங்கள்...
காட்டு பக்கம் நூறுபிணம் ஓ சாமியே
வீட்டுப் பக்கம் நூறு பிணம் ஓ சாமியே
ரோட்டுப் பக்கம் நூறு பிணம் ஓ சாமியே
மேட்டுப் பக்கம் நூறு பிணம் ஓ சாமியே

*இது உங்கள் நெஞ்சை உருக்கவில்லை என்றால் வேறு எது மனதைத் தொடும்?*

*1913ஆம் ஆண்டு சூளை முனுசாமி முதலியார் எழுதிய "மேல் பறக்கும் மோட்டர் கார் சிந்து", ஜூல்ஸ்டைக் எனும் பெல்ஜிய நாட்டு விமானி மதராஸில் விமானம் ஓட்டி கண்காட்சி செய்ததைக் கூறுகிறது. ஆங்கில மொழி பத்திரிகைகளிலோ, வேறு எந்த தமிழ்பத்திரிகையிலுமோ இது குறித்த தரவுகள் இல்லை!*




*டிசம்பர் 31, 1886. இன்றைய சென்னைசென்ட்ரலுக்குப் பின்புறமுள்ள பீப்பிள்ஸ் பார்க். அங்கு தான் கொண்டாடப்பட்டது இங்கிலாந்தின் விக்டோரியா மகாராணி அரியணை ஏறிய பொன்விழா. 1878ஆம் ஆண்டு முதல் ஆண்டின் இறுதி நாளில் பீப்பிள்ஸ்பார்க்கில் வாணவேடிக்கையுடன் "மெட்ராஸ்ஃபேர்" எனப்படும் திருவிழா நடப்பது வாடிக்கை. 1886ஆம் ஆண்டு அப்படி நடைபெற்ற விழாவில், மக்கள் நின்று கொண்டிருந்த பேண்டு ஸ்டாண்டில் தீ பற்றியது. 6000 பேர் அப்போது அங்கு இருந்ததாகவும், அன்றைய கமாண்டர்-இன்-சீஃப், அர்புத்னாட் என்ற பெருவணிகரின் மனைவி, திருவிதாங்கூர் சமஸ்தான இளவரசர் ஆகியோர் அங்கு இருந்ததாகவும் தெரிவிக்கிறது "தி கிராஃபிக்" என்ற பெயரில் இங்கிலாந்தில் அப்போது வெளிவந்த பத்திரிகை. திடீரென தீபற்றியதில், 15 பேர் குளத்தில் குதித்து மாண்டதாகவும் நிறைய இந்தியர்கள் இறந்ததாகவும் சொல்லும் பத்திரிகை, முக்கியஸ்தர்கள் யாருக்கும் சேதம் எதுவும் இல்லை என்றும், திருவிதாங்கூர் இளவரசர் அவரது ஜமேதாரின் தோளில் உட்கார்ந்து தப்பியதாகவும் எழுதுகிறது. கூடவே ரேக்ளா பந்தயம் மற்றும் மாட்டுவண்டி பந்தய புகைப்படங்கள் வேறு!*

## தி கிராஃபிக் பத்திரிகை, 1886

*வ.வே.சு. ஐயர் அந்த கொடிய விபத்து குறித்து தன் "என் சரித்திரம்" நூலில் இவ்வாறு எழுதுகிறார்-*

*"ஐயோ! பார்க்கு வேடிக்கைக்குப் போட்டிருந்தபெரிய கொட்டகையில்தீப்பிடித்துக் கொண்டதாம். பல பேர் சேதம். தீயை அணைக்க முடியவில்லை. குழந்தைகளும், பெண்களும், சிறுவர்களும், கிழவர்களும் தீயில்அகப்பட்டுத் தீய்ந்து போய்விட்டார்கள்"என்று சொல்லிக் கண்ணீர் விட்டார்.*

*உடனே புரூஃப்களை அப்படியேவைத்துவிட்டு அவருடன் அங்கே போய் பார்த்தேன். என்ன பரிதாபமான காட்சி! கண்ணால் பார்க்க சகிக்கவில்லை. உடல் முழுவதும் வெந்தும் உயிர்போகாமல் துடித்துக் கொண்டும், கைவெந்தும், கால்தீய்ந்தும் போன பல ஜனங்களைப் பார்த்தேன். வெளியூர்களில்இருந்து ஆயிரக்கணக்கான ஜனங்கள் வந்திருந்தனர். அவர்களில் பலர் இந்த விபத்தில் சிக்கி உயிர் இழந்தனர்."*

*இந்த விபத்து பற்றி இரண்டு சிந்துப் பாடல்கள் வெளிவந்தன.*

## பீப்பிள்ஸ் பார்க்கு பான் ரவுண்டு பத்திய சிந்து:-முனுசாமி-1898

கொடுமையைக் கேளீர் காலேஜில் மாண்ட
கொள்ளையைப் பாரீர்
படியினில் ஆயிரத்து எண்ணூத்து எண்பத்தாறில்
பகரும் டிசம்பர் மாதம் முப்பத்தோறாம் தேதி...
ஓலையெரிந்து வீழ்ந்து உடல் தீஞ்ச பிணம் பாதி
ஒருவருக்கொருவர் கட்டி உருண்ட பிணங்கள் பாதி
தாளைத் திறந்து கொண்டு தவித்த பிணங்கள் பாதி
தையலர் பிணம் பாதி கைவெந்த பிணம் பாதி...

## சென்னைப் பீப்பிள்ஸ் பார்க்கின் தீக்கோள் சிந்து:-வேலாயுதம்,1887

ஆகமொத்தம் நானூற்று ஐந்து என மெயில் பேப்பர்
அறைகின்றது அன்றன் வகை எண்பது பிள்ளைகள்
போக நாற்பத்து இரண்டு பெண்கள் புருஷர்கள்
பிரிவு இரண்டு நூற்றென்பானொடு மூன்றதில்
பேசுங்கால் நூற்றுதொண்ணூற்று மூன்று
ஆஸ்பத்திரி சேர்த்து மிச்சமாய் நின்றது.

*விபத்து நடந்த தேதியை சரியாகக் குறிப்பிட்டு, மக்கள் எப்படி பரிதாபமாக மாண்டு போனார்கள் என்று சொல்கிறது முதல் பாடல். மொத்தம் 493 பேர் மரணித்ததாக கணக்கு சொல்கிறது இரண்டாவது பாடல். இப்படியாக இந்தப்பாடல்களை படிக்க படிக்க சுவாரசியம் அதிகரிக்கிறது, மக்களின் வரலாறு கண்முன் விரிகிறது. 1930களில் விடுதலைப் போராட்டத்தின்போது இந்தப்புத்தகங்கள் மக்களிடையே புரட்சியை விதைப்பதாக நம்பிய ஆங்கிலேய அரசு அவற்றை தடை செய்தது. செய்தித்தாள்களை மக்கள் அதிகம் வாசிக்கத் துவங்கினர். வாசிப்பாரின்றி குஜிலிப் புத்தகங்கள் தேக்கம் அடைந்தன. சினிமாத்துறை அசுர வளர்ச்சி காணத் துவங்கியதும், அரையணா, காலணா குஜிலி பாட்டுப் புத்தகங்கள் ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் சினிமா பாட்டுப் புத்தகங்களாக உருமாறின. சாமானியன் செய்தித்தாள் வாசிக்கக் கற்றுக்கொண்டான், அல்லது வானொலி செய்திகளை எங்காவது கேட்டுக்கொண்டான். அவன் மனசை அதற்கு மேல் இங்கு சொல்வாரும் இல்லை, கேட்பாரும் இல்லை...*



» எஸ்.சங்கரநாராயணன்

# அர்த்தநாரீஸ்வரி

இடது மார்பில் லேசாய் ஒரு கல் தன்மை இருந்தது போல் தோன்றியது பார்வதிக்கு. உடம்பில் நரம்புகள் முறுக்கி முடிச்சிட்டுக் கொண்டு சில இடங்களில் இரத்தம் சீராகப் பாயாமல் சதை இறுகிப் போவது உண்டு. அவளுக்குத் தொடையில் அப்படி ஒரு சதைக்கட்டி இருக்கிறது. மருத்துவரிடம் காட்டியபோது, கொழுப்பு அப்படிச் சேர்ந்து கொள்கிறது, அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம், என்றுவிட்டதில் அவளும் அதை அலட்சியப் படுத்தி விட்டாள். குளிக்கும்போது சோப்பு தேய்க்கையில் இப்போது இதை கவனித்தாள். இடது மார்பின் சதைத் திரளில் அவள் கைக்கு சற்று அந்தக் கல், நெகிழ்ந்து கொடுக்காத களிமண்ணாய் நிரடியது.

எழுந்த ஜோரில் குதிரையின் வேகம் பெறுகிறார்கள் பெண்கள். இப்பவாவது பரவாயில்லை, ஷில்பா வளர்ந்து விட்டது. தன் காரியம் தானே பார்த்துக் கொள்ள துப்பு வந்தாச்சி. இல்லாவிட்டால் காலையில் அவளை எழுப்பி பல் தேய்த்து விடுவது முதல் அம்மா கூடநிற்க வேண்டும். இப்போது ஷில்பா ஏழாவது படிக்கிறாள். பதின்வயதுப் பருவம். மெல்ல மொட்டு ஒன்று விரிவதை உணர்கிற பருவம் அது. காலையில் ஷில்பாவை இன்னும் அம்மாதான் எழுப்பி விட வேண்டியிருக்கிறது. லேட்டானால் அம்மாவிடம், “ஏம்மா என்னை எழுப்பல? நேத்தே சொன்னேனே?” என்று முகத்தைச் சுருக்கும். காலம், பிள்ளைகளுக்கு பயப்படுகிற காலம் ஆயிற்று.

இரண்டு பர்னர் அடுப்பில், காபி, குழம்பு, குக்கர், டிபன்... என, மியூசிகல் சேர் போல, பரபரக்கும். சமையல் அறையிலேயே, பலசரக்கு வைக்கிற அலமாரியில் தனி தட்டு ஒன்றில் மீனாட்சி படம். பிள்ளையார், முருகர் எனப் படங்கள். இரண்டு பக்கத்திலும் சின்ன குத்துவிளக்கு இருக்கும். வெள்ளிகளில் தவிர மற்ற நாட்களில் நேரம் இருந்தால், கடவுள்களுக்குக் கொடுப்பினை இருந்தால், விளக்கேற்றுவாள். வெள்ளிக் கிழமை ஏற்ற என்றே விளக்கும் வெள்ளியில் வைத்திருப்பதாகத் தோணும்.

தோளில் துண்டை உருவிக்கொண்டபடி குளிக்க ஓடுகையில், முதல் நாள் அந்தக் கட்டியை கவனித்தாலும் ச் என அலட்சியப் படுத்தினாள். ரெண்டாம் நாள் வாக்கில் டாக்டரிடம் போக வேண்டும் என்று நினைத்துக் கொண்டபடியே சோப்பு தேய்த்துக் கொண்டாள். விசுவிடம் சொல்ல அதன் பிறகும் நாலைந்து நாள் ஆகிவிட்டது. இராத்திரி அவன் நேரங் கழித்து வருவான். சாப்பிடுகையில் டிவியில் செய்தி பார்ப்பான். அப்போது பார்த்து, கூட வீட்டுச் செய்திகளையும் பரிமாற வேண்டியிருக்கும். விட்டால், சாப்பிட்ட ஜோரில், அவள் இரவின் கடைசிகட்ட வீட்டு வேலைகளை முடித்துவிட்டு வருவதற்குள், ஷில்பா பக்கத்தில் போய்ப் படுத்து நிமிஷமாய்த் தூங்கி விடுவான். அத்தனைக்கு வேலை என அலுவலகத்தில அவனைப் பிழிந்தெடுத்தார்கள். அப்படியே ஒருவாரம் அந்தச் சேதி பரிமாற விட்டுவிட்டது.

வெளியே பார்க்க வித்தியாசமாய்த் தெரிகிறதா, என்று கண்ணாடி வைத்துக்கொண்டு பார்த்தாள். தெரியவில்லை. அழுத்தினால் பால்கொழுக்கட்டை போல உள்ளே. ஒரு கோலிகுண்டாய் சதைத் திரட்சி. ஒண்ணும் விசேஷமா பயப்படறா மாதிரி இருக்காது, என்று சொல்லிக் கொண்டபடியே துண்டால் துடைத்துக்கொள்ள ஆரம்பித்தாள். துதிப்போர்க்கு வல்வினை போம். துன்பம் போம். இந்தக் கட்டியும் போம்... சிரிக்காதே. நேரமாகிவிட்டது. வெளியே வந்தபோது விசு கண்டுபிடித்து விட்டான். முழுக்கைச் சட்டை மணிக்கட்டு பட்டனை மாட்டிக்கொண்டபடியே “என்ன சிரிச்சிக்கிட்டே வெளியே வரே?” என்றான். வெட்கமாய்ப் போயிற்று.

பார்வதிக்கு எடுப்பான மார்புகள். சிறுத்த இடையின் எழுச்சிகள் என தனித்து கொடியில் (காமக்கொடி) மொட்டாய்க் காணும். தன் அழகையிட்டு பார்வதிக்கு கல்லூரிக் காலத்தில் இருந்தே சிறு பெருமை உண்டு. அவளுக்கு ஆப்த தோழி சியாமளாவுக்கு அவளைப் பார்க்கப் பொறாமை. அவளது மார்புகள் சிறியவை. ஸ்வாமிக்கு என தனியே கொஞ்சூண்டு எடுத்துக் காட்டிய நைவேத்தியம் போல. (அவள் கணவன் பேரே ஸ்வாமிநாதன்.) ஆனால் பிற்காலத்தில் அவளுக்குக் கல்யாணமாகி குழந்தை பிறந்தபோது அவளிடம் தான் அதிகம் பால் சுரந்தது. பாருவுக்கு நாலைந்து மாதத்திலேயே பால் சத்து வறண்டு விட்டது. “பார் என்னைப் பார்”ன்றா மாதிரியே இருக்கியேடி, என்று சியாமளா அவளைப் பார்த்துப் பெருமூச்சு விடுவாள். உன்னைக் கட்டிக்கப்போறவன் அதிர்ஷ்டக்காரன், என்றுகூடச் சொல்வாள். சியாமளாவின் குழந்தை என் குழந்தையை விட அதிர்ஷ்டம் செய்தது, என நினைத்துக் கொண்டாள் பார்வதி. எப்ப சென்னை வந்தாலும் சியாமளா அவளை வந்து பார்க்காமல் போக மாட்டாள்.

அன்றைக்குப் பார்த்தாள். இந்தக் குட்டி ஷில்பா, சின்னப்பெண் என்றல்லவா இவளை நினைத்துக் கொண்டிருந்தேன். குளித்துவிட்டு ஷிம்மிசில் வந்தது. கண்ணாடி முன்னால் நின்று என்ன தோணியதோ நெஞ்சை உற்றுப் பார்க்கிறது. உடம்பின் புதிய திரட்சியும் மேடு பள்ளங்களுமாக காலம் அவளை வளர்த்தெடுத்துக் கொண்டிருப்பதை ஒரு பரவசத்துடன் கவனிக்கிற நுட்பம் ஷில்பாவுக்கு வந்து விட்டாப் போலிருந்தது. இனி அவளிடம் நாம், பெரியவர்கள் சொல்லிக் கொடுத்ததாக அல்லாமல், தன்பாவனைகள், அபிப்ராயங்கள் வளர ஆரம்பிக்கும் என்று இருந்தது. தானே தன் கனவு வலையைப் பரத்தி மீன் பிடித்தல்.

ஷில்பா இப்போது குளிப்பாட்டி விட அம்மாவைக் கூப்பிடுவதையே நிறுத்தியாகி விட்டது. உடல் தன் சொத்தாகி விட்டது அதற்கு. அதை மற்றவர் பார்க்க வெட்கப் பட்டாப் போல. அதன் அந்தரங்கம் ஒரு பூ போல மலர, கண்ணுக்குத் தெரியாமல் நாசிக்கு வாசனை தட்டுகிறாப் போன்று மற்றவர் அதை ரசிக்கிற பருவம். தன்னைப் பற்றி தனக்கு மாத்திரமே சில விஷயங்கள் புரிகிற பாவனை அது. பருவம் மாயக் கதவுகளைத் திறந்து இன்னொரு இடத்துக்கு அவளை அழைத்துச் செல்கிறது. தலைக்கு ஷாம்பூ கூட தானே தேய்த்துக் கொள்கிறாள். தனியே ஒரு பூரிப்பு அவளிடம் வந்திருந்தது இப்போது. கன்னங்களில் சிவப்பு ஏறி சிரிப்பே அவ்வளவு ஒளிர்ந்தது. குதிரைவால் அசைய துள்ளலான அவள் நடை. பார்வதிக்கு தன் பால்ய காலங்கள் நினைவுக்கு வந்தன. உலகம் பெண்களால் அழகு பெறுகிறது. ஏ ஆண்களே, வேடிக்கை பாருங்கள்.

அதன்பின்னான நாலாம் நாள் விசுவே கேட்டான். “இன்னும் போகல்ல,” என்றாள். அலட்சியம் பண்ணக்கூடாது. டாக்டர் கிட்டக் காட்டிறணும், என்றான் விசு. என்றாலும் அவனால் கூடவர முடியவில்லை. அடுத்த ரெண்டாவது நாளில் அவள் குளிக்கிற போது அந்தக் கட்டியை நிரடிப் பார்த்தாள். வலித்தது. இதுவரை வலிக்கவில்லை. இப்போது தொட்டால் வலித்தது.



டாக்டரிடம் போகாமல் முடியாது போலிருந்தது. அவள் டாக்டரிடம் போனால் துணைக்கு என்று எப்பவும் அவளது அலுவலக சிநேகிதி சந்திரா தான் வருவாள். ரெண்டு மூணு நாளா அவளுக்கு வர ஒழியவில்லை. வேலைகளை அன்று பார்வதி விறுவிறுவென்று முடித்தாள். நாலரை மணிக்கு மேனேஜர் வெளியே கிளம்ப வேண்டியிருந்தது, என்று அவரது கடிதங்களை விரைந்து அடித்துக் கொடுத்தாள். அதைத் திருத்தி அவர் கையெழுத்து இட்டுவிட்டுக் கிளம்பிப் போனதும் அவளுக்கு வேலையே இல்லாமல் ஆயிற்று. சரி என்று ஹெட் கிளார்க்கிடம் சொல்லிவிட்டு வீட்டுக்குக் கிளம்பினாள். பஸ் வர காத்திருக்கும் போது சட்டென்று யோசனை. மணி பார்த்தாள். நாலு ஐம்பது. புரசைவாக்கம் போகலாமா? டாக்டர் நளினி ஆறு ஆறரைக்கு வருவாள். ஷில்பா பிறந்தபோது பிரசவம் பார்த்தவள் அவளே. எப்படியும் இங்கேயிருந்து போக முக்கால், ஒருமணி நேரம் எடுக்கும். எங்காவது ஹோட்டலில் காபி சாப்பிட்டுவிட்டுப் போனால், அதிகம் காத்திருக்காமல் அவளைப் பார்த்து விடலாம். ஐந்தரையில் இருந்தே ஒரு உதவியாளினி டோக்கன்கள் வழங்க ஆரம்பித்து விடுவாள்.

பஸ் நிறுத்தத்தில் பூக்காரி புன்னகைத்தாள். கெட்டியாய்த் தொடுத்த மல்லிகை. ஒருமுழம் வாங்கி பார்வதி சூடிக் கொண்டாள். வேலை முடிந்து சீக்கிரம் கிளம்ப முடிகிற நாட்கள் அற்புதமானவை. அதிகம் தாமதிக்காமல் புரசை பஸ் வந்தது. ஏறிக்கொண்டாள். கிளம்பு முன் முகம் கழுவி திரும்ப ஸ்டிக்கர் பொட்டு புதிதாய் வைத்துக் கொண்டிருந்தாள். எப்பவும் கைப்பையில் சிறு பௌடர் டின்னும் இருக்கும். பூ வேறு இன்றைக்கு. அவளுக்கே தன்னைப்பிட்டு திருப்தி. வேலைக்குச் சென்று திரும்பும் அந்த அலுப்பு சாராத முகம். ஆண்கள் அவளைப் பார்த்த பார்வையில் ஒரு ஈர்ப்பு இருந்தது. எனக்கு ஏழாவது படிக்கிற பெண் இருக்கிறாள், என்று சொல்லி விடலாமா, சிரிச்சிறாதே சனியனே.

டோக்கன் வாங்கிக்கொண்டு பிறகு வெளியே காபி சாப்பிடப் போகலாமா என்று கூடத் தோன்றியது. அவள் போகவும் டாக்டர் நளினி அப்பதான் உள்ளே நுழைகிறாள். அவளது மாலை வணக்கத்தை தலையாட்டி ஏற்றுக்கொண்டபடி உள்ளே மருத்துவசோதனை அறைக்குப் போனாள். டாக்டர் வந்ததில், காத்திருந்த இரண்டு பேர் எழுந்து நின்றார்கள். வேறு டாக்டர் யாராவது இந்த டாக்டரைப் பார்க்கச் சொல்லி பரிந்துரை செய்திருந்தால் டாக்டர் நளினி சீக்கிரம் வருவது உண்டு.

அதிகம் காத்திருக்க நேரவில்லை. அவள் முறை பத்தே நிமிடத்தில் வந்தது. டாக்டர் அவள் உள்ளாடையைக் கழற்றச் சொன்னாள். வலிக்குதா? வலிக்குதா, என்றபடி டாக்டர் அவளது திரட்சியை அமுக்கி அமுக்கிக் கொடுத்தாள். எந்தப் பக்கம்? "இடது பக்கம் டாக்டர்." ம். இங்கதான். இல்லியா?... என்று கண்டுகொண்டாள். வலி இருக்கா? "லேசா..." எப்பலேர்ந்து இது? "தெரியல டாக்டர். ஒரு பதினஞ்சு இருபது நாளா..." அடாடா. உடனே வர்றதில்லையா?... என்றாள் டாக்டர். போய்க் கையைக் கழுவிக் கொண்டாள். அதுவரை உள்ளாடையை மீண்டும் அணியாமல் பார்வதி காத்திருந்தாள். டாக்டர் திரும்பிப் பார்த்து விட்டு போட்டுக்கலாம், என்றாள். "தொடையில் இப்பிடி ஒரு கொழுப்புக் கட்டி... நீங்க கூட..." அது வேற. இது வேறம்மா. சில டெஸ்ட்டும் பண்ணிப் பாத்திருவம், சரியா? கவலைப்படாதீங்க. டாக்டர் விறுவிறுவென்று சீட்டில் சில மருந்துகள் எழுதினாள். சோதனைகளுக்கும் தனியே எழுதித் தந்தாள். கால தாமதம் செய்ய வேண்டாம். ஒரு வாரத்ல திரும்ப வந்தா நல்லது. "எது கட்டியா?" குட் ஜோக்.

ஷில்பா வீட்டுப்பாடம் எல்லாம் முடித்துவிட்டு டிவி பார்த்துக் கொண்டிருந்தது. சோபாவின் முதுகுப்பக்கம் மீறி அவள் தலை தெரிந்தது. உயரத்தில் அவள் தன் அப்பாவைக் கொள்வாள் போலிருந்தது. பள்ளிக்குப் போட்டுக்கொண்டு போன இரட்டைப் பின்னலைத் தானே தளர்த்தி பரத்தி விட்டிருந்தாள். கருத்த கேசப் பின்னணியில் முகம் தனிக் களையாய் இருந்தது. பருவ வயதில் இந்தச் சிறுமிகள் என்னமாய் ஜ்வலிக்கிறார்கள்.

"எதும் குடிச்சியாடி?" என்று கேட்டபடியே உள்ளே வந்தாள் அம்மா. இல்லம்மா. நீ ஏன் இன்னிக்கு லேட்டு, என்றாள் ஷில்பா. "டாக்..." என ஆரம்பித்தவள், "ஆபிஸ்ல கொஞ்சம் வேலை" என மாற்றிக் கொண்டாள். குழந்தையை பயமுறுத்த வேண்டியது இல்லை. ஃப்ரிஜ்ஜில் இருந்து எடுத்து பாலைக் காய்ச்சினாள் பார்வதி. என்ன தோணியதோ. பால் காயுமுன் திரும்பி ஸ்வாமி முன்னால் கை குவித்தாள். வெள்ளி விளக்கை ஏற்றினாள்.

டிவியில் எதையோ பார்த்து கெக் கெக் என்று ஷில்பா சிரிக்கும் சத்தம். டாக்டரிடம் அவர்கள் யாரும் அதிகம் போனது கிடையாது. சின்ன ஜுரம் தலைவலி என்றால் மருந்தே இல்லாத ஓய்வு. சில சமயம் மருந்துக் கடையில் சொல்லி மருந்து வாங்கி ஒரு ரெண்டு நாளில் அதுவே குணமாகிவிடும். இப்போது மருத்துவரிடம் போய்க் காட்ட வேண்டியதாகி விட்டது. மருந்துக் கடைக்காரனிடம் காட்டி மருந்து கேட்பதா? நாம் காட்டாமலேயே இந்த ஆண்கள்... உனக்கு ரொம்பதான் திமிராயிட்டதுடி, என தன்னையே அதட்டிக் கொண்டாள். டாக்டர் பயமுறுத்துகிறாளோ, என்ற யோசனைக்கு மாற்று வேண்டியிருந்தது.

விசு வந்ததும் அவன் சட்டையைக் கழற்றுமுன் டாக்டரைப் பார்த்துவிட்டு வந்த விவரம் சொன்னாள். ம், என தலையாட்டினான். டெஸ்ட் எதும் எழுதித் தந்தா எடுத்திரு. பாத்துக்கலாம். ராத்திரிக்கு என்ன? "தோசை. இப்பவே வார்க்கட்டுமா?" என்றாள். போயி முகம் கழுவிட்டு வந்திர்றேன். சாப்பிட்டிர்லாம். மணி எட்டாச்சே, என்றான். ஷில்பா அப்போது தான் வீட்டுப்பாடம் முடித்துவிட்டு எழுந்து நின்று சோம்பல் முறித்தது. இந்த தூரத்தில் இருந்து குழல்விளக்கு வெளிச்சத்தில் அதன் வெள்ளை ஷிம்மிசின் உள்புறம் தெரிந்தது. உள்ளாடைகள் தேவைப்படும் அளவு அவள் வளர்ந்து வருகிறாள். அவள் பார்ப்பதை விசுவும் கவனித்து விட்டான். புன்னகை செய்தான். பெரியவளாயிருவா சீக்கிரம். பட்டுப்பாவாடை எடுக்க காசு எடுத்து வைக்கணும், என்றான். அவள் அவன் மூக்கைத் திருகினாள். "இதெல்லாம் கவனிக்க உங்களுக்கு நேரம் இருக்கா. ஆம்பளைக்கு இதெல்லாம் தெரியாதுன்னு நினைச்சேன்."

குழந்தை சீக்கிரம் தூங்கிட்டா நல்லது, என்று சிரிக்கிற கணவனை ஆச்சர்யமாய்ப் பார்த்தாள். அவன் கூடவே ஷில்பாவும் சாப்பிட உட்கார்ந்தது. அப்பவே அதற்குக் கண்ணை சொக்கியது. ஓஹ், என சிறு கொட்டாவியும் விட்டது. நல்ல சகுனம், என்றான் அவன் அவளுக்கு மாத்திரம் புரியும்படி. "அடுப்படில வேலை கெடக்கு. ஒரு மணி ஆகும். கிரைண்டர் போடணும். அரிசி உளுந்து ஊற வெச்சிருக்கேன்." ஐயோ அவ்ள நேரம் ஆகுமா? தூக்க மாத்திரை போல, முழிச்சிட்டிருக்கவும் எதாவது மாத்திரை இருக்கா, என்று கேட்டான் அவன்.

எங்க காட்டு. காட்டினாள். பாத்தா தெரியலியே? "ம்" என்றாள். பெரிசா ஒண்ணும் இராது, என்று ஆறுதலாக அவள் நெற்றியில் முத்தம் இட்டான். என்ன இன்னிக்கு பூ அமர்க்களம், என்றான் இருட்டில்.

டெஸ்ட்டுகள் இரண்டு மூன்று இருந்தன. முன்பே பதிவு செய்து குறிப்பிட்ட நேரத்தில் போய் அவற்றை மேற்கொள்ள வேண்டும். நிறையப் பேர் வந்தார்கள். இத்தனை பேருக்குமா கட்டி, என்று தோணியது. அவரவர் பிரச்னை அவரவர்க்கு. தவிரவும் இப்பவெல்லாம் மருத்துவர்கள் இப்படி சோதனைக் கூடங்களோடு கைகுலுக்கி எல்லாரையுமே எதாவது சோதனை என்று அனுப்பி வைப்பது சகஜமாகித்தான் விட்டது. டாக்டர் சோதனை செய்யச் சொல்லி சொல்லிவிட்டால், வேண்டாம் என தவிர்க்கவோ அதை மறுக்கவோ எப்படி முடியும். மாலையில் வந்து ரிசல்ட் வாங்கிக் கொள்ளச் சொன்னார்கள்.

மேமோகிராஃபி மற்றும் ஸ்கேன் என எல்லாமே ஆயிரக் கணக்கில் தான். கடைசியில் ஒண்ணுமில்லை, என்று வீட்டுக்கு அனுப்பி விடுகிறார்கள். மாலை ரிசல்ட் வாங்கிக்கொண்டு டாக்டர் நளினியைப் பார்க்கலாம் என அலைபேசியில் அழைத்தாள். டாக்டர் ரிப்போர்ட்டுகளை வாங்கிப் பார்த்தபோது, தலையாட்டிக் கொண்டாள். நல்ல சேதி சொல்லுங்க டாக்டர். அவளைப் பார்த்தபடி, மருந்து எழுதித் தந்ததை விடாமல் சாப்ட்டீங்களா, என்றாள். பார்வதி தலையாட்டினாள். இப்ப எப்பிடி இருக்கு உங்களுக்கு? "வலி அப்பிடியேதான் இருக்கு டாக்டர். இன் ஃபாக்ட்..." யுவார் ரைட், என்றாள் நளினி. இன்னொரு பெரிய டாக்டருக்கு ரெஃபர் பண்றேன். அவங்க ஒருதரம் உங்களைப் பார்த்திறட்டும்.

முதன் முறையாக பயம் வந்தது. "எனிதிங் சீரியஸ் டாக்டர்?" பார்க்கலாம். டாக்டர் நளினி சீதாலெட்சுமி என்ற மருத்துவருக்குப் பரிந்துரை எழுதித் தந்தாள். வயதான பெரிய மருத்துவர் சீதாலெட்சுமி. அவளே தனி ஆஸ்பத்திரி வைத்திருந்தாள். மத்த பெரிய டாக்டர்களும், ஸ்பெஷலிஸ்டுகளும் அவள் வரவழைத்தாள் அங்கே. அவளைச் சந்திக்கவும் முன்பதிவு வேண்டியிருந்தது. கிளினிக் வாசலிலேயே பெரிய சாய்பாபா படம். ஊதுபத்தி கமழ்ந்தது. நிறைய வயதான பெண்களே காத்திருந்தார்கள். எனக்கு வயதாகி விட்டதா? நாற்பத்தி ரெண்டு, மூணு அவ்வளவுதான். அங்கே இருந்தவர்களில் ஆக இளையவள் அவள் தான். மற்றவர்கள் மாமிகள். அவளும் மாமி தான். ஆனால் என்னை அக்கா என அழைத்தால் சந்தோஷப்படும் மாமி நான். இந்த மாமிகளே தலைக்கு டை அடிக்கிறார்கள். மாமி என இல்லாமல் அக்கா, என்றால் அவர்களும் சந்தோஷப்படக் கூடும்.

பாரு?... என்று சத்தமாய்க் குரல். முதுகில் ஒரு அடி விழுந்தது. திரும்பிப் பார்த்தால். சியாமளா. அதானே, அவளிடம் இப்படியொரு நட்பு பாராட்ட வேறு யாரால் முடியும்? "என்னடி நீ இங்க?" என்னோட நாத்தனாருக்கு பீரியட்ஸ் பிராப்ளம். சின்ன விஷயம் தான். கூட வரச் சொன்னா. வந்தேன். "அவ என்ன வேலை பாக்கறா?" ஸ்கூல் டீச்சர். ஏன்? "அப்ப அவளால பசங்களுக்கும் பீரியட்ஸ் பிராப்ளம். இல்லியா?" நீ இன்னும் அப்பிடியே இருக்கியேடி, பேச்சும் மாறல்ல. ஆளும் அதே கும்ம், என சியாமளா அவள் கையைக் கிள்ளினாள்.. "இன்னும் எத்தனை நாள் சென்னைவாசம்?" ரெண்டு மூணு நாள் இருப்பேன். என் பையன் எம். எஸ். பண்ண அமெரிக்கா போனான். நேத்தி ஃப்ளைட் ஏத்திவிட்டுட்டு வந்தேன், என்றாள். "வெரி குட். கங்கிராட்ஸ்" என்றாள் பார்வதி.

உனக்கென்னடி பிரச்னை. பார்வதி வாயைத் திறக்குமுன் உள்ளே அழைத்தார்கள். "இரு. வரேன்" என உள்ளே போனாள் பார்வதி. உள்ளேயும் சாய்பாபா படம், சந்தன மாலை ஆடிக் கொண்டிருந்தது. ரெண்டு கையும் ஓங்கி ஆசி வழங்கும் பாபா. டாக்டர் நளினி அனுப்பினாங்களா? குட், வாங்க உட்காருங்க. என்ன விஷயம்? அவள் பேசப் பேச டாக்டர் தலையாட்டி கேட்டுக் கொண்டாள். இப்பல்லாம் நிறையப் பேருக்கு இந்த மாதிரி ஆயிருது. பாக்கலாம். டெஸ்ட் ரிசல்ட் எல்லாம்... "கொண்டு வந்திருக்கேன் டாக்டர்" என்று எடுத்துக் கொடுத்தாள். தனியாத்தான் வந்திருக்கீங்களா? "ஆமாம் டாக்டர்..." பக்கம் பக்கமாக எல்லாம் பார்த்தாள். ஸ்கேன் படங்களை எடுத்துப் பார்த்தபடியே சொன்னாள். "சில சமயம் இந்த மாதிரி லேட்டாக் காமிக்கும்... என்றாள் டாக்டர். "என்ன டாக்டர்?"

பிரஸ்ட் கான்சர் மாறி இருக்கு, என்றாள் டாக்டர் சலனம் இல்லாமல். தூக்கிவாரிப் போட்டது. கவலைப் படாதீங்க. உயிருக்கு ஆபத்து இருக்காது, என்றாள் டாக்டர். ரேடியம் ட்ரீட்மென்ட் குடுத்துப் பாக்கலாம். கடைசியா வேற வழி இல்லைன்னா, பிரஸ்ட்டை ரிமூவ் பண்ணிறலாம்... எச்சில் கூட்டி முழுங்கியபடி தலையாட்டினாள் பார்வதி. லேசாய் கண் இருட்டியது. வெளியே சியாமளா அவளுக்காகக் காத்திருந்தாள். கடவுளே, நான் எப்படிச் சமாளிக்கப் போகிறேன் என்று இருந்தது. ஒருபக்க மார்பு இல்லாமல் இப்பவெல்லாம் நிறையப் பேர் இருக்கிறார்கள். கர்ப்பப் பையை எடுத்துவிட்டு இருக்கிறார்கள். ஸ்பாஞ்சு பிரா அணிந்து கொள்ளலாம். பார்க்க வித்தியாசமாத் தெரியாது. அந்த சியாமளா நல்லா இருந்த நாளிலேயே ஸ்பாஞ்சு பிரா தான்.

டாக்டரிடம் உடம்பைக் காட்டியபோது என்னென்னவோ யோசனைகள். இந்த மார்பு அடுத்த தடவை அமுக்க முடியாது. புல்லுத்தரையில் நடுவே களிமண் பாதை போல கெட்டியான உடம்பில் தழும்பு ஒன்று அடையாளம். அவ்வளவே. இனி நான் என்னை முழு பெண்ணாக உணர முடியுமா? என் கணவன்... அவனுக்கு இந்த அனுபவம் எப்பிடி இருக்கப் போகிறது? அடி உசிர் முக்கியம் இல்லியா? பாப்பம். ரேடியேஷன் கொடுக்கலாம். அதுலயே சரியாப் போகவும் வாய்ப்பு இருக்கு. "ஆனா அதெல்லாம் ஆரம்பித்தால் உடம்பு தகதகன்னு எரியும்பாங்க. தலைமுடில்லாம் கொட்டிரும்..." தபார், என்பான் அவன். ஒரு பிரச்னைன்னு ஆரம்பிக்கு முன்னமே கற்பனைக்குப் போயிறக் கூடாது. எதுன்னாலும், வரட்டும். அதை அவாய்ட் பண்ண முடியாதுன்னால், லெட் அஸ் ஃபேஸ் இட். அப்படித்தான் சொல்லுவான். நல்ல ஆறுதலான கணவன் தான். எனினும் நான் மேலே போகும் ராக்கெட் ஒண்ணொண்ணா உதிர்த்துப் போடுவதைப் போல என் அழகைக் கொஞ்சம் கொஞ்சமாக இழக்கப் போகிறேன்... மேலே எங்க போகிறேன் நான்? ஒரேடியா மேல போவேண்டிதான்... என்ன ஒரு செய்தியில் இத்தனை கலவரப் பட்டுவிட்டேன்.. அவளுக்கு வெட்கமாக இருந்தது.

பிரா போட்டுக்கோம்மா, என்றாள் டாக்டர். இனி இதுக்கே வேலை இராது போலுக்கே. விடாமல மாத்திரை சாப்பிடு. இப்ப இதெல்லாம் சகஜமாயிட்டது. என்ன பண்றது? நாங்க தான் பாக்கறோமே. வர்ற வெள்ளிக்கிழமை வரியா? "எதுக்கு டாக்டர்?" ரேடியேஷன். "சரி" என சொல்ல முடியாமல் குரல் இழுத்துக் கொண்டது. நல்லாதான் பேர் வைத்திருக்கிறார்கள். பார்வதி. மதுரை மீனாட்சிக்கு, வீர தீர பராக்கிரம மீனாட்சிக்கு மூன்று முலைகள் இருந்தனவாம். சிவபெருமானைக் கண்டதும் காதல் கொண்டு பெண்மையின் கிளர்ச்சியில் மூணாம் முலை கரைந்து அவள் பெண்மைச் சாயல் கொண்டாளாம். ஹா, நான் எனது இரண்டாவது முலையை இழக்கிறேன்.

இழந்து அர்த்தநாரீஸ்வரி ஆகிறேனா? சிரிப்பு வந்தது. சிரிக்கிறேனா அழுகிறேனா அவளுக்கே குழப்பமாய் இருந்தது. மருத்துவர் அறையை விட்டு வெளியே வந்தாள்.

**(எழுதிக் கொண்டிருக்கும் நாவலின் சுருக்கம்.)**





» **ஜெயதேவன்**

## நமக்கான நாள் வரும்

இறந்தவர்களைக் கூட நாம் நிம்மதியாக
உறங்க விடுவதில்லை சமாதியில்...
தட்டி எழுப்பி வந்து நிற்க வைத்து விடுகிறோம் சிலையாக
அன்றி படமாக.

இறந்தவர்கள் விருப்பத்தை நாம்
கேட்பதே இல்லை
நமக்குப் பிடித்த சர்க்கரை இனிப்பு பணியாரத்தை செய்து
வைத்து விடுகிறோம்
முப்பதாம் நாள் படையலில்...
சர்க்கரையில் இறந்து போன அப்பாவுக்கு கூட..

நம் ஒவ்வொரு அசைவையும் அவர்கள்
கண்காணிக்கிறார்கள் என்று
அச்சப் படுகிறோம்...
ஆகவேதான் படுக்கை அறைக்கு
அவர்களை நுழைய விடுவதில்லை...
.
கடவுளுக்குப் பக்கம் வைத்தேன்
கடந்த ஆண்டு இறந்து போன அம்மா படத்தை.....
இது சாமிக் குத்தம் என செண்பகம் பாட்டி சொன்னார்..
நடு ஹாலில் மாட்டி விட்டாள் மனைவி.

தனியாய் இருக்கும் போது நமக்கு
அவர்கள் நினைவு தேவைப் படுகிறது
பேச்சுத் துணைக்காய்....
பேச்சுக்கு ஆட்கள் வந்தவுடன் அவர்களை கழற்றி விட்டு
விடுகிறோம் நினைவிலிருந்து...

எப்படியோ ஒரு நாள் நாமும் தொங்குவோம்
எந்த சஞ்சலமும் இன்றி இவ்வளவையும்
பார்ப்போம்...
குருவி பறந்து போன கூட்டை
ஒரு காய்ந்த மரம் பார்ப்பது போல

## உள் யுத்தம் செய்

எங்கிருந்தோ வந்த சலங்கை ஒலியின்
கைகளைப் பற்றிக் கொண்டே வந்தேன்
அது கரகாட்டக்காரியின் காலுக்குப் பக்கம்
என்னை உட்கார வைத்தது.....

பறை சப்தம் கேட்டு ஓடி வந்தேன்
ஆதிக் காட்டின் அபூர்வ மணத்தோடு
ஒரு கூட்டம் வானத்தின் பாடலை பாடிக் கொண்டிருந்தது...

பம்பை உடுக்கையில் எழுந்து ஆடிக்கொண்டிருந்த
சிவனுக்குக் கீழ் படுத்திருந்தான்
பிரம்ம சூத்திரன்....

புல்லாங்குழல் வழி ஆநிரைகளுக்குள் நுழைந்து
தன் ஆதிமூலத்தை தேடிக் கொண்டிந்தான் கண்ணபிரான்

நான்கு வேதங்களை கட்டி இழுத்து வந்தான்
பைரவர் வடிவில் ....
ஒரு காட்டு வேடன்

ஓம் என்னும் ஒலிகள் ஒலித்த கோவில் வாசலில்
தேவாரம் பாடிய படி
உள்ளே நடந்தனர் புதிய தீட்சிதர்கள்

உடல்களில் பேதம் ஏதென
குகனை அழைத்துக் கொண்டு கருவறைக்குள் போனான்
இராமபிரான்...

வெளி யுத்தம் முடிந்தது இனி
உள் யுத்தம் செய் என்னும் நந்தலாலாவின்
சொல் வில் எடுத்துக் தொடுத்தான்
நவீன விஜயன்

★ ★ ★

» சந்திரா மனோகரன்

# பாய்ந்தோடும் மௌனம்

ஒரு போக்கனைப்போல நான் கடந்த பழைய சாலைகள்
போக்கிடமின்றி அலையும் சருகுகளும் கந்தல்களும்
ஆண்டாண்டாகத் தொடரும் நியமம்
இரவின் நிச்சலனத்தில் என்ன நடக்கிறதோ....
பின்னிரவு நினைவுகளில் நிறையும் நறுமணம்
எங்கிருந்தோ பரவும் யாசகனின் துர்நாற்றம்
ஆயிரம் நயனங்களின் தரிசனத்தில்
ஆதவன் விழிப்பில் ஒரு தெறிப்பு
தூசும் புழுதியும் சாலைகளைக் கவ்வும்
நிறமிழந்த விடியற்புறம்
வெற்றுநோக்கில் மனதின் அசைவுகள்
அதிர்வின் பிரதிபலிப்பில்
ஒரு பலவருணப்பூச்சி வழிதவறிய வியப்பு
குளிரற்ற பகலில் அது மாயமானது
எங்கோ பாறைகளை உடைக்கும் பேரோசை
நீருக்காக அலையும் வெண்ணிறப்பறவைகள்
விரும்பாத பயணத்தில் சோர்வை நோக்கி
நிச்சயமற்ற மழைத் துளிகளில் ஏது வசந்தம் ?
உருவமற்ற சாலைகளைக் கொத்தும்
சூரிய ஒளிக்கு மட்டும் விதிவிலக்கில்லை
முதுமை தட்டும் என் வாழ்வின் நேரங்கள்
வீழ்ந்த இலைகளும் குப்பைகளுமே புதுசு
என் இரகசிய மௌனம் வெள்ளம்போல்
நெடிய சாலைகளில் பெருக்கெடுத்தோடுகிறது .

மவுனமே பேசு
எனது
எனது உறவினர்
எனது அண்டை அயலார்
எனது எதிரி
எனது நட்பு
எனக்குப் பரிச்சயமே இல்லாதோர்
அனைவரின் மவுனமும்
ஒரு சேர உடைந்தது
ஒரே நாளில்
ஒரே நேரத்தில்
உள்ளிருப்பை வெளிநடப்புச் செய்து
வெப்பச் சலன மழை
விழுந்து புரண்டு
ஓடியது செம்மை நெய்து
ஓ...!
கலகத்தின் வேரோட்டமும்
மவுனமே,
உன்னில் தானே..!

– **கண்ணன் புலமி**

» பாப்பாக்குடி இரா.செல்வமணி

# காணாமல் போகச் செய்துவிடு!

சிலை நிகர்த்தவளே
என்
நிலை குலைத்தவளே!

உன் அலையாடும் கூந்தலுக்குள்
சிக்க வைத்து என்னை
சிறைப்பிடி!

மின்னுகின்ற
புன்னகையால்
என்னை மென்றுவிடு!

கண்களின்
ஒளிவீச்சதனில்
காணாமல் போகச்செய்!

இதயத்தில் இடம்கொடுத்து
இனியொரு
உதயமில்லாமல் செய்து விடு!

மார்பின்
இடைவெளிகளில்
மறைத்துவிடு என்னை!

இடைசுமந்து
இடம்தெரியாது
இருத்திக் கொள்!

பஞ்சுப் பாத கொலுசதனில்
கொஞ்சுகின்ற ஒலியாக்கி
பாதம் கிடத்திக் கொள்!

சிலை நிகர்த்தவளே
என்
நிலை குலைத்தவளே!

எப்படியேனும்
உனக்குள் என்னை
காணாமல் போகச் செய்துவிடு!

## தமிழுக்கு ஓர் இழப்பு!

திராவிட இயக்கத்தின் முதுபெரும் தலைவரும் தமிழகத்தின் வளர்ச்சிக்கு துணைநின்றவரும் ஐந்து முறை முதல் அமைச்சராக ஆட்சி செய்தவரும் தமிழ்த் திரையுலகில் ஒரு சமுதாயப் புரட்சியை ஏற்படுத்தியவரும் திருக்குறளுக்கும் திருவள்ளுவருக்கும் குறளோவியம் தந்தும், வானுயர்ந்த சிலை தந்தும் பெருமை சேர்த்தவரும், சிறுகதை, வரலாற்றுப் புதினம், தன் வரலாறு, கவிதை, உரைநடை, கடித இலக்கியம் என மொழியின் அத்துணை இடங்களிலும் எளிதாய் அமர்ந்து கொண்டவருமான கலைஞர் மு.கருணாநிதியின் மறைவு தமிழுக்கும் தமிழகத்திற்கும் பேரிழப்பு. காணிநிலம் தனது அஞ்சலியை செலுத்துகிறது.

# மீன் குழந்தைகள்



பொருட்காட்சிக்கு சென்ற
அகரன்குட்டி நீர்நிரம்பிய
சிறுகுளம்போல் இருக்கும்
மீன்குஞ்சுகளின்
நெகிழிப்பையொன்றை ஏந்தி வருகிறான்
பையளவு நீருக்குள்
மோதித்திரும்பும் குஞ்சுகள்
முணுமுணுத்துக் கொண்டிருக்கும்
மௌனத்தை கேட்டப்படி
அம்முக்குட்டி செல்லக்குட்டி
பூச்சாண்டியென பெயர்மொழிந்து
ரொம்பநேரம் குளிச்சா சளி பிடிக்கும்
சீக்கிரம் குளிச்சிட்டு வாங்க
அம்மா வச்ச மீன்குழம்பு
சாப்பிடலாமென கையணைத்து
கதைத்தப்படி உறங்கிப்போக
சலனமில்லா கனவில்
நீந்தித்திளைக்கிறது
பிரபஞ்சத்தின் பெருங்கடல்

**– அய்யாவு பிரமநாதன்**

---




பிரசவ அவஸ்தையோடு
பரபரப்பாய்,
வான்முழுக்க அலையும்
சூலுற்ற மேகக் கூட்டத்தை
வீட்டின் பால்கனியில் அமர்ந்து
பார்க்கவே பரவசமாயிருக்கிறது..

ஆனாலும் சுழன்றடிக்கும்
ஊரக்காற்று எங்கே
திசை மாற்றிக்
கடத்திப் போய்விடுமோ
என்ற அச்சமும்,
'அதற்கு முன்பே
கொட்டித் கொட்டித் தீர்க்க
வேண்டியதுதானே' என்று
அதன் தாமதத்தின் மீது
கோபமும் வந்தது..

இதுவே வீட்டின்
பால்கனிக்குப் பதிலாய்,
சாலையில் அவசர அவசரமாய்
வீடு நோக்கி விரைந்து
கொண்டிருப்பவர்களில்
ஒருவனாய் நான் இருந்திருந்தால்,

'வீடு போய்ச்
சேரும் வரை மழையைக்
கொஞ்சம் தாமதப்படுத்த்',
கடவுளிடம் வேண்டிக்
கொண்டிருந்திருக்கலாம்..!

**– ஆதியோகி**



---

» ம.சக்திவேலாயுதம்




எது செயற்கை
எது இயற்கை என தெரியாமலேயே
துளிர் விடும் விதை
மூச்சு விடுவதற்குள்
மரணித்துவிடுகின்றது..

தன் மேனியெங்கும்
ஆயிரம் வெட்டுக்களோடு
வாழ்கிறது பூமி...

மக்காத குப்பைகளால்
நிரம்பி வழிந்து
எம்மண்ணிலோ
மண்புழு வம்சம் முழுமையும்
அழிந்து வருகின்றது...

நம் வாழ்விடங்களோ
நெகிழிகளின் ஆக்கிரமிப்பில்
நெளிந்த வண்ணமாய்..

தன்னைத்தொலைத்தும்
தொலைந்தும்
நிலத்தடிநீரும் தவித்தழுகிறது..

நம் அவசர உலகத்தின்
மார்தட்டிய மாற்றங்களால்
மழையைக்கூட செயற்கையாய்
தூவிடும் அவலம்...

எல்லாம் ஆரோக்கியம் என்று
விளம்பர உத்திகளால்
சிறைபட்டு அடைபட்டு
நாகரீகத்தின் முன்னோடிகளாய்
நாம் நசுக்கப்படுவதைக்கூட
பெருமையாய்
நாமே பேசும் வண்ணமாய்..

இந்த தலைமுறைக்கு
வரலாற்றுப்பொருளாகவும்
அடுத்த தலைமுறைக்கு
கண்காட்சிப்பொருளாகவும்
மாறிவிட்ட உழவுலகம்...

புறக்குப்பை மட்டுமல்ல
அகக்குப்பையும் சேர்ந்து விட்ட
கழிவுகளின் தொகுப்பாய்
வாழ்ந்திடுகிறோம் நாம்!

மாறிடுமோ இவ்வுலகம்
என எதிர்பார்த்தே காத்திருக்கும் நான் ஏன்
மாற்றத்தை கொண்டுவரக்கூடாதென்ற
என் கேள்வியிலிருந்தே
என் அகக்குப்பைகள்
அகன்றிடத்தொடங்கிவிட்டது..
இப்போது சொல்லுங்கள்
உங்கள் அகமும் புறமும்?

---

கை தட்டிக் காசு கேட்கும்
அரவாணிகளை விரட்டாதீர்கள்.

ஆண்மையோ பெண்மையோ
நமக்கு விதிக்கப்பட்டது

அவர்களுக்குச்
சபிக்கப்பட்டது.

**– பா.தென்றல்**



» சுரேஷ் பரதன்

# ரோஜாத் தோட்டம்



அம்மாவுக்கு கண்ணில் வந்த காட்ராக்ட் பிரச்சினைக்காக கண் மருத்துவமனையில் டோக்கன் எடுத்துக் கொண்டு வரிசையில் காத்திருந்த வேளையில் சாரதா மதினியைப் பார்த்தேன். கடைசியாய் அவளைப் பார்த்து ஒரு பத்து வருடங்களாகவது இருக்கும். எந்த மாற்றமும் இல்லாமல் பத்து வருடங்களுக்கு முன் எப்படி இருந்தாளோ அப்படியே இருந்தாள் மதினி. வருடக் கணக்கில் ஒரே மாதிரி மாற்றமே இல்லாமல் எப்படித்தான் இருக்க முடிகிறதோ அவளால். தெரியவில்லை. நான் மதினியைப் பார்த்த மாதிரி அவளும் என்னைப் பார்த்தாள். பார்த்ததும் அவளும் என்னை சட்டென அடையாளங்கண்டு கொண்டாள். மத்தாப்பூ பூத்த மாதிரியான ஒரு புன்னகை அவள் முகத்தில் பூத்தது. நேராய் என்னருகில் வந்து என் கைகளைப் பற்றிக் கொண்டாள்.

சரவணா... என்று ஆசையாய் பாசமாய் அழைத்த அந்த ஒற்றைச் சொல்லில் அவள் பத்து வருடமாய் பார்க்காமலிருந்த இடைவெளியை ஒன்றுமே இல்லாத மாதிரி ஆக்கி நொடியில் அதைப் புதுப்பித்தும் விட்டாள். ஒரு சிலருக்குத்தான் இந்த வித்தையெல்லாம் கை கூடி வருகிறது. அவள் அப்படிக் கூப்பிட்டதில் என் கையைப் பற்றிக் கொண்டதில் தெரிந்த பாசத்தின் வெம்மையில் எனக்கும் பொசுக்கென்று கண்ணீர் வந்து விட்டது. இத்தனைக்கும் அவளோ அவள் கணவனான பரமு அண்ணனோ எனக்கு இரத்த சொந்தமெல்லாம் இல்லை. என் அப்பா சொந்தமாய் வீடு கட்டிக் கொள்ளும் முன் நாங்கள் வாடகைக்கு இருந்த வீட்டில் அடுத்த போர்ஷனில் பரமு என்கிற பரமசிவன் அண்ணன் புதிதாய் கல்யாணம் பண்ணிக் கொண்டு குடி வந்ததிலிருந்து பழக்கம். ஒரு ஏழு வருஷம் ஒன்றாய் குடியிருந்திருப்போம். அவ்வளவு தான். ஆனாலும் அத்தனை நெருக்கம்.

பரமு அண்ணனை எனக்கு அவன் எங்கள் பக்கத்து போர்ஷனுக்கு வரும் முன்பிருந்தே அவனை நான் அண்ணனென்று தான் அழைத்து வந்திருக்கிறேன். என்னை விட ஏழெட்டு வயது பெரியவன் பரமு அண்ணன். வெகு நாட்களாய் அவன் கல்யாணம் பண்ணிக் கொள்ளாமல் இருந்தான். அவனம்மா படுத்த படுக்கையாய் ஆன பின்தான் தன் கல்யாணத்திற்கு சம்மதித்து சாரதா மதினியைக் கல்யாணம் பண்ணிக் கொண்டான். அவனம்மாவும் இவன் எப்படா கல்யாணம் பண்ணிக் கொள்வான் தான் எப்படா நிம்மதியாய் கண்ணை மூடலாம் என்று காத்திருந்த மாதிரி அண்ணனுக்குக் கல்யாணமான நான்கைந்து மாதத்திற்குள் இறந்து போனாள். சொந்த பந்தமென்று அதிகமாய் ஆளில்லாத பரமு அண்ணனுக்கு மதினியே எல்லா சொந்தமும் பந்தமுமாய் ஆகிப்போனாள்.

பரமு அண்ணனும் மதினியும் இங்கு குடி வந்து சில நாட்களுக்குள்ளேயே அவர்கள் இரண்டு பேரையும் எல்லாருக்கும் அப்படிப் பிடித்துப் போனது. இருவரது குணமும் அப்படி. அம்மா மதினியுடனும் மதினி அம்மாவுடனும் நெருக்கமாய் நெருங்கி விட்டார்கள். எங்கள் வீட்டு விசேசங்கள் எதுவும் அது சின்னதோ அல்லது பெரிதோ மதினியில்லாமல் கழிந்ததில்லை. மதினி ஒரு சில நாட்களுக்கு அவள் சொந்த ஊரான பக்கத்து கிராமத்துக்குப் போனாளென்றால் அம்மாவுக்கு அவள் எப்போதடா திரும்பி வருவாள் என்றாகிவிடும். பல நாட்களில் இரண்டு வீட்டிற்கும் சேர்த்து சமையல் ஒரே வீட்டிலேயே நடந்தது. நாங்கள் குல தெய்வ வழிபாட்டுக்கு செல்லும் போதெல்லாம் மதினியும் அண்ணனும் வந்து விடுவார்கள். மதினி ஊரில் உள்ள செல்லாயி அம்மன் கோயில் திருவிழாவிற்கு வருடந்தவறாமல் அம்மா போய் வந்தாள். ஒரு தடவை கூட நான் போனதேயில்லை. போக முடியாமல் ஏதாவது ஒரு வேலை வந்து விடும். அம்மாவுக்கும் அப்பாவுக்கும் இருந்த ஒரே கவலை அண்ணனுக்கும் மதினிக்கும் இன்னும் ஒரு குழந்தை கூட பிறக்கவில்லையே என்பது தான். அம்மா தன் வேண்டுதலில் அதையும் சேர்த்துக் கொண்டிருந்தாள். எல்லாம் சந்தோசமாக போய்க் கொண்டிருந்தது.

இந்த சூழ்நிலையில் தான் அப்பா அவர் சொந்தமாய் வாங்கியிருந்த இடத்தில் வீடு கட்ட ஆரம்பித்தார். அண்ணனுக்கும் மதினிக்கும் அதில் அதீத சந்தோசம் இருந்தாலும் சின்னதாய் ஒரு கவலையும் இருந்தது. நாங்கள் வீடு கட்டி முடித்தாயிற்றென்றால் அவர்களை விட்டு இந்த வீட்டை விட்டுப் புது வீட்டிற்குப் போக வேண்டியிருக்குமே என்பது தான் அது. இருந்தாலும் கூட இருந்து எல்லா உதவிகளையும் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்தார்கள். வீடு இன்னும் நான்கைந்து மாதங்களில் முடிந்துவிடும் என்ற நிலையில் மதினியின் ஊரில் செல்லாயி அம்மன் கோயில் திருவிழா வந்தது. மதினி பிடிவாதமாய் சொல்லிவிட்டாள். இந்த முறை திருவிழாவிற்கு அம்மாவுடன் நானும் அப்பாவும் கண்டிப்பாய் வர வேண்டுமென்று.

மதினியை ஒரு வாரத்திற்கு முன்பே அவளக்கா வந்து அழைத்துப் போனாள். மதினி ஒரு வாரம் தன் அக்காவுடனும், அக்காவின் ஐந்து வயது மகன் விச்சுவுடனும் இருப்பதற்காக தன் கிராமத்திற்குக் கிளம்பிச் சென்று விட்டாள். அம்மா திருவிழாவுக்கு இரண்டு நாட்களுக்கு முன்பே போய்விட்டாள். நானும் அப்பாவும் திருவிழாவின் முக்கிய தினத்தன்று மாலையில் வருவதாக சொல்லி விட்டோம். அந்த ஒரு வாரமாய் பரமு அண்ணன் மதினியின் கிராமத்துக்கு போவதும் வருவதுமாய் இருந்தான். கிளம்ப வேண்டிய நாளில் அப்பாவுக்கு வீட்டு வேலை சம்பந்தமாக முக்கியமான வேலையொன்று வந்துவிட, அவரால் திருவிழாவுக்கு வர முடியாமல் போனது. அண்ணன் தன் வேலை விசயமாக வெளியூர் போயிருந்தவன் இரவு கிராமத்திற்கு நேராக வந்து சேர்ந்து விடுவதாகச் சொல்லிவிட்டு போய்விட்டான். நான் மட்டும் மதியமே அரை



நாள் விடுப்பு எடுத்துக் கொண்டு கிளம்பினேன்.

இரண்டு பஸ்கள் மாறி அரைக் கிலோமீட்டர் தூரம் நடந்து நான் மதினியின் அந்த சின்ன கிராமத்தை அடைந்த போது அந்தி சாயத் துவங்கியிருந்தது. கோயிலை விசாரித்துக் கொண்டு சென்றேன். மதினி, அம்மா, விச்சு, விச்சுவின் அம்மா எல்லாரும் அங்குதான் இருந்தார்கள். மதினிதான் என்னை அவளுடன் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றாள்.

இது தான் எங்க அக்கா வீடு. வீட்டை அடைந்ததும் மதினி சொன்னாள். ரொம்பச் சின்னதாய் இருந்தது. வாசலில் இரண்டு பக்கமும் பெரிய திண்ணை இருந்தது. பையோடு உள்ளே போகப் போனேன்.

இந்த பக்கத்து வீடும் எங்களோடதுதான். அதுல பையை வச்சிரு. நான் காபி போட்டு எடுத்துட்டு வாரேன் என்று பக்கத்து வீட்டு கதவை திறந்து தந்தாள். நான் உள்ளே போனேன். ஒரேயொரு அறை இருந்தது. அறையின் இரண்டு பக்கமும் கதவுகள் இருந்தன. ஒன்று தெரு பக்கமும் இன்னொன்று அதன் எதிர்புறமும் இருந்தன. அறைக்குள் அம்மாவின் பையிருந்தது. அதனருகிலேயே நான் என் பையையும் வைத்து விட்டு வீட்டிற்கு பின்பக்கக் கதவைத் திறந்தேன். கதவைத் திறந்ததும் கதவை ஒட்டி அறையின் பாதியளவில் ஒரு அடுப்படி இருந்தது. அதைத் தாண்டி அழகான தோட்டமொன்று அதிகம் பராமரிப்பில்லாமல் இருந்தது. தோட்டத்தின் நடுவில் ஒரு கிணறும் கிணற்றடியில் வாளியும் இருந்தது. தோட்டத்திலிருந்து பார்த்த பொழுது பக்கத்து வீடான மதினியின் அக்கா வீடும் நன்றாகத் தெரிந்தது. அந்த வீடும் இந்த வீடும் அமைப்பில் ஒரே மாதிரியாய் இருந்தது. அந்த வீட்டு அடுப்படியில் மதினி வேலையாய் இருந்தது இங்கிருந்து பார்க்கும்போது தெரிந்தது. காப்பி போட்டுக் கொண்டிருக்கிறாள் போலும். நான் கிணற்றருகே வந்து அதனுள் எட்டிப் பார்த்தேன். நிறய தண்ணீர் இருந்தது. எனக்குத் தண்ணீர் நிறைந்த அந்தக் கிணற்றைப் பார்த்ததும் குளிக்க வேண்டுமென்ற ஆசை வந்துவிட்டது.

கிணற்றிலிருந்து வாளியாய் வாளியாய் நீரிறைத்துக் குளித்தேன். தலையை நன்கு துவட்டிவிட்டு அறையில் இருந்த என் துணிகள் அடங்கிய பையிலிருந்து கைலியை எடுத்து உடுத்தப் போனேன். கையில் காப்பி டபராவுடன் தெருவோரக் கதவைத் திறந்து மதினி வந்தாள்.

குளிச்சிட்டியா சரவணா. காபி எடுத்துக்கோ என்று பக்கத்திலிருந்த சின்ன ஸ்டூலில் வைத்தாள். கதவை மூடிவிட்டு திரும்பப் போனவள் சட்டென என்னருகே வந்தாள். இடுப்பில் துண்டுடன் நின்றிருந்த என்னை இறுகத் தழுவிக் கொண்டாள். ஏனிப்படி செய்தாள் என்று யோசிக்கக் கூட இயலாமல் நான் மலைத்துப் போய் நின்றேன். ஒரு கால் நிமிடம்தான். நான் அவளை உதறி விடுபட நினைத்தது மதினிக்கு எப்படித் தெரிந்ததோ அப்படியே அவளும் உதறி என்னை விடுவித்தாள். தன் முகத்தை முந்தானையால் துடைத்தாள். கதவை நோக்கிச் சென்றவள் காப்பியிருந்த ஸ்டூல் அருகே சென்றதும்

காப்பி ஆறி போறதுக்குள்ள குடிச்சிரு சரவணா. திரும்ப கோயிலுக்குத்தான் போகணும் கைலியோட கோயிலுக்கு போக வேண்டாம். என்று சொல்லிவிட்டு கதவைச் சாத்திவிட்டு வெளியே போய்விட்டாள்.

நான் உள்ளேயே இருந்தேன். படபடப்பாய் இருந்தது. என்னவாயிற்று மதினிக்கு. ஏனிப்படிச் செய்தாள். மதினி இப்படிப்பட்ட ஆளில்லையே. இந்த ஆறு வருஷத்தில் இப்படி ஒரு சம்பவம் நிகழ்வதற்கான வாய்ப்புகள் எத்தனையோ இருந்திருகின்றனவே. அப்பொதெல்லாம் நிகழாத ஒன்று ஏன் இன்று நிகழ்ந்தது. பலப்பல யோசனைகளில் இருந்தேன். எவ்வளவு நேரம் பூட்டிய கதவுக்குள்ளேயே இருப்பது. பேண்ட்டும் டீசர்ட்டும் அணிந்து, காப்பி டபராவை எடுத்துக் கொண்டு வெளியே வந்தேன். வெளித் திண்ணையில் மதினி உட்கார்ந்திருந்தாள். என்னைப் பார்த்து விட்டு திரும்பிக் கொண்டாள். மதினி நாளொன்றுக்கு எத்தனை காப்பி வேண்டுமானாலும் குடிப்பாள். அதனால் நான் காப்பி தம்ளிரிலிருந்து கொஞ்சம் டபராவில் ஊற்றி மதினியிடம் கொடுத்துவிட்டு அவளருகே சற்று தள்ளி அம்ர்ந்தேன். டபராவிலிருந்த காபியில் ஒரு மடக்கைக் குடித்த மதினி

சரவணா ரோஜாப்பூ பாத்தியா என்றாள். எனக்கு எந்த ரோஜாப்பூவும் தெரியவில்லை. எங்கே என்று கேட்டேன். அவள் வீட்டிற்கு எதிர்ப்புறம் கையைக் காண்பித்து அந்தா எதுத்தாப்புல என்றாள். எனக்கு எதிர்த் திசையில் ஒரு மண் சுவர்தான் தெரிந்தது. எங்க மதினி என்றேன் மீண்டும். சுவருக்கு அந்தப் பக்கம் என்றாள். அப்போது தான் பார்த்தேன். மண் சுவர் தாண்டி நீளமாய் ரோஜாத் தோட்டம் இருந்தது. ரோஜாப் பூவை தொட்டிச் செடியிலோ அல்லது தரையில் நட்டுவைத்த ஒற்றைச் செடியிலோ அதுவரை பார்த்திருந்தவன் அதைத்



தானே தேடுவான். இப்படி ஒரு தோட்டத்தையா தேடுவான். தோட்டம் பூராவும் ரோஜாச் செடிகள். எல்லாச் செடிகளிலும் ஒன்றோ இரண்டோ பூக்கள். வரும் பொழுதே கவனித்திருக்க வேண்டும். தவறி விட்டது. இப்போதோ எதிரில் உள்ள எதையும் தேடி இரசிக்க முடியாததொரு மன நிலை. அதனால் இப்போதும் கவனிக்கவில்லை. மதினி காண்பித்துத் தராவிட்டால் கவனிக்காமலேயே போயிருக்கக் கூடும். மொத்தமாய் அவ்வளவு ரோஜா நிற ரோஜாக்களைப் பார்த்ததில் மனது கொஞ்சமாய் லேசாகியது.

இந்த தோட்டம் நாங்க சின்னப் பிள்ளையா இருக்கறச்சே இருந்தே இங்கனதான் இருக்கு. கோயிலுக்குச் சொந்தமான தோட்டம். எப்பவுமே ரோஜாச் செடிதான் இருக்கும். எப்பவுமே பூத்துக்கிட்டே இருக்கும். எங்கப்பா தான் இந்தத் தோட்டத்தை பாத்துக்கிட்டுருந்தாரு. உனக்குத் தெரியுமா இதிலேர்ந்து இன்னிக்கு வரைக்கும் ஒரு பூவையும் பறிச்சு தலையில வச்சுக்கிட்டதில்லை. எங்களுக்கு விவரம் தெரிஞ்ச நாள்லேர்ந்து நானும் அக்காவும் பூக்களைப் பறிச்சுப் பறிச்சு ஒரு பெரிய ஓலக் கூடையில் போட்டு வைப்போம். எதுத்த தோட்டமெல்லாம் பூ. தொடலாம். பறிக்கலாம். ஆனா தலையில் மட்டும் வைக்கக் கூடாது. பூவைப் பறிக்கிறதுக்கு மட்டுந்தான் அனுமதி. தலையில வைக்கிறதுக்குக் கிடையாது. கோயில் சொத்து. கை வைக்கக் கூடாது. இது மட்டுந்தான் அப்பா எங்களுக்குச் சொல்லிச் சொல்லி வளர்த்தார்.

இன்னொரு விசயம் தெரியுமா. இந்த இரண்டு வீட்டுக்குப் பின்னாலேயும் தோட்டமிருக்குறதப் பாத்தேல்ல. அதுலயும் ஒரு ரோஜாச் செடி கூட வைக்கக் கூடாதுன்னுட்டார் அப்பா. ஏன் தெரியுமா. அதுல பூத்த பூவை நாங்க தலையில வச்சிக்கிட்டா கூட நாங்க கோயில் தோட்டத்துப் பூவைத்தான் வச்சிருக்கோம்ன்னு யாராச்சும் நினைச்சிருவாங்களாம்.

ஆனா நான் ஒரு நாள் கோயில் பூவிலிருந்து ஒரேயொரு பூவை எடுத்து தனியா வச்சிருந்தேன். அப்பா கோயிலுக்குப் போனப்புறம் வச்சுக்கலாம்ன்னு. அம்மாவோ அக்காவோ திட்டினா சமாளிச்சிக்கிடலாம்ன்னும் நினைச்சிருந்தேன். அப்பாவும் போயிட்டாரு. நான் குளிச்சிட்டு இரட்டைச் சடை போட்டுக்கிட்டு அந்தப் பூவை எடுத்தேன். கண்ணாடியில பாத்துக்கிட்டே இடது காதோரமா வைக்கலாம்ன்னு காது வரைக்கும் கொண்டு போயிட்டேன். அப்புறமா என்ன தடுத்துச்சுன்னே தெரியலை. அதை நான் வச்சுக்கவே இல்லை. யாருக்கும் தெரியாம அந்த பூவை இந்தத் தோட்டத்துக்குள்ளேயே போட்டுட்டேன். நா மொதமொதல்ல ரோஜாப் பூ வச்சதே உங்க அண்ணன் வாங்கிக் கொடுத்துத்தான். அதுவும் இந்த ஊருக்கு வந்துட்டா நா ரோஜாப் பூ வச்சுக்கறதே இல்லை.

மதினி அந்த ரோஜாத் தோட்டத்தின் கதையைச் சொல்லிக் கொண்டே போனாள். ஏன் இந்தக் கதையை இப்போது சொன்னாள் என்று தெரியவில்லை. அவள் இந்த ரோஜாத் தோட்டத்தை மட்டும் குறிப்பிட்டுச் சொல்லவில்லை என்பதை புரிந்து கொள்ள முடிந்தது. அவள் மனதிற்குள் இதை விட பெரிய சோகமொன்று இருப்பதையும் ஊகிக்க முடிந்தது. அதன் பின் இருவரும் கோவிலுக்குச் சென்றோம். இரவு வெகு நேரம்வரை கோயிலில் இருந்தோம். எனக்குத் திருவிழா நடைமுறைகளில் மனது ஒட்டவேயில்லை. பரமு அண்ணன் இரவு பத்துமணி போல வந்தான். அவன் முகத்தைப் பார்க்க எனக்கு ஒரு மாதிரியாய் இருந்தது. முந்தைய எல்லா வருடங்களையும் போல இந்த வருடமும் திருவிழாவிற்கு நான் வராமலேயே இருந்திருக்கலாம் என்று தோன்றியது.

கோயில் திருவிழா முடிந்த அன்று அந்த கிராமத்திலேயே தங்கி விட்டோம். மறுநாள் காலையில் ஊருக்குக் கிளம்புவதாக உத்தேசித்திருந்தோம். நானும் பரமு அண்ணனும் மதினியின் அக்காள் வீட்டிற்குப் பக்கத்து வீட்டில் படுத்துக் கொண்டோம். அண்ணன் வேலை மற்றும் அலைச்சல் காரணமாக படுத்தவுடன் தூங்கிப் போனான். எனக்கு வெகு நேரம் தூக்கம் வரவேயில்லை. மதினி ஏன் அப்படிச் செய்தாள் என்ற கேள்வி இடைவிடாது மனதில் கேட்டுக் கொண்டேயிருந்தது. அதற்குப் பதிலை நான்கு மாதங்களுக்குப் பின் நிகழ்ந்த எங்கள் வீட்டு கிரஹப் பிரவேச தினத்திற்கு முந்தைய நாள் இரவில் பரமு அண்ணன் என்னிடம் சொன்னான்.

எங்கள் புது வீட்டிற்கு மறுநாள் கிரஹப் பிரவேசம். முந்தினநாள் இரவில் எல்லா வேலைகளும் முடிந்த நிலையில் நானும் பரமு அண்ணனும் இரவுச் சாப்பாட்டிற்குப் பின் மாடியில் அமர்ந்திருந்தோம். ஏதேதோ பேசிக் கொண்டிருந்த போது பேச்சு திருவிழா நாளை நோக்கிப் போயிற்று.

அப்போது அண்ணன் சரவணா.. நீ திருவிழாவுக்குப் போயிட்டு வந்த பின்னாடி

மதினிகிட்ட ஒழுங்காப் பேசுறதில்லைங்கிறதை நான் கவனிச்சிட்டுத் தான் வர்றேன். அது எதுக்கு, அன்னைக்கு என்ன நடந்துச்சு எல்லாம் எனக்குத் தெரியும். மதினி எல்லாத்தையும் எங்கிட்ட சொல்லிட்டா.

எனக்கு என்ன பதில் பேசுறதுன்னே தெரியவில்லை. பேசாமல் உட்கார்ந்திருந்தேன். அன்றைய தின நிகழ்வுகள் மீண்டும் மனதில் நிழலாடின. அண்ணனே மீண்டும் பேசினான்.

உனக்கு நான் ரொம்ப நாளா கல்யாணம் பண்ணிக்காம இருந்தேன்னு தெரியுந்தானே. ஆனா ஏன் பண்ணிக்கலைன்னு தெரியுமா. இதப் பத்தி நான் மதினிக்கிட்ட மட்டும் தான் சொல்லியிருக்கேன். இப்ப உங்கிட்ட சொல்லுறேன். எனக்கு பொண்ணுங்க கூட படுக்குறத, செக்ஸ் வச்சிக்கிறத யோசிக்கவே முடியல... ஏன்னா எனக்கு... நான்...

அவன் என்ன சொல்ல வருகிறான் என்று எனக்குப் புரிந்ததும் தூக்கி வாரி போட்டது. பதட்டத்தில் எழுந்து விட்டேன். அண்ணன் தான் கையைப் பிடித்து உட்கார வைத்தான்.

பயப்படாதே சரவணா. நான் உன்னை ஒன்னும் செய்ய மாட்டேன். ஆமா. நான் அப்படித்தான். அப்புறம் ஏன் மதினியைக் கல்யாணம் பண்ணிக்கிட்டேன்னு கேக்குறியா.. தப்புத்தான். சாகக் கிடந்த அம்மாகிட்ட போய் இத எப்படி நாஞ்சொல்லுவேன். இனிமே எங்கம்மா பொழைக்கவே பொழைக்காதுன்னு தெரிஞ்ச பின்னாடி, அந்த ஜீவன தவிக்காம சாக விடனும்ன்னு மட்டுந்தான் அப்ப தோணிச்சு. அப்படி ஒரு கட்டாயத்துக்காகத்தான் நான் சாரதாவைக் கல்யாணம் பண்ணிகிட்டேன். சாகப்போற ஒரு கிழவிக்காக வாழ வேண்டிய ஒரு சின்னப் பொண்ணோட வாழ்க்கையை நா சீரழிச்சுட்டேன். கல்யாணத்தன்னைக்கு இராத்திரியே இந்த விசயத்தை நான் சாரதா கிட்ட சொல்லிட்டேன். அவ அன்னைக்கு வாய் பொத்தி சத்தமில்லாம இராத்திரி பூரா அழுதுகிட்டே இருந்தா.

எங்கம்மா செத்த அன்னக்கு நா சாரதா கிட்ட நீ எப்ப வேணுமின்னாலும் என்னைய விட்டுட்டு போகலாம். வேற கல்யாணம் பண்ணிக்கலாம்ன்னு அப்படின்னு சொன்னேன். அதுக்குண்டான செலவை நானே ஏத்துக்குறேன்னும் சொன்னேன். அதுக்கு சாரதா ஒன்னுமே சொல்லாம இருந்துட்டா. அவளும் எங்க போவா. அவளுக்கு கல்யாணம் ஆகுமுன்னமேயே அவளோட அப்பா அம்மா இரண்டு பேரும் போய் சேர்ந்துட்டாங்க. என்னோட அவளுக்குக் கல்யாணம் பண்ணி வச்சதே அவளோட அக்காவும் அவரோட வீட்டுக்காரரும் தான். என் புருஷன் ஆம்பிளையே இல்லை அதுனால நா அவங்கூட குடும்பம் நடத்த மாட்டேன். வேறொரு கல்யாணம் பண்ணிக்கப் போறேன்னு அவ தன் அக்காகிட்டேயும் அவளோட புருஷங்கிட்டேயும் எப்படி சொல்லுவா.. அதுக்கு பதிலா இங்கேயே ஏங்கூடவே இருந்திரலாம்ன்னு நெனச்சுட்டா போல. அவளோட வாழ்க்கையை நாந்தான் பாழாக்கிட்டேன். கல்யாணம் மட்டுந்தான் ஆகியிருக்கு அவளுக்கு. வேற ஒன்னுமே ஆகலை.

அண்ணன் அழுதான். நான் அவன் கைகளைப் பற்றிக் கொண்டேன். அழுது முடித்தவன் மீண்டும் பேசினான்.

ஆனா சாரதா ஒரு நாள் கூட இதப்பத்தி என்ன கேலி பேசினதே இல்ல சரவணா. வாழ்க்கையை இப்படி வாழவே கூடாதுங்குறதுக்கு எப்படி நான் ஒரு உதாரணமோ அப்படி இப்படித்தான் வாழணுங்கிறதுக்கு சாரதா உதாரணம். அது மட்டுந்தான் வாழ்க்கையா... அதைத் தாண்டி நிறைய விசயம் இருக்குன்னு அவ சந்தோசமாத்தான் இருக்கா. இருந்தாலும் மனசுக்குள்ள அந்த சோகம் இருக்கத் தானே செய்யும். உடம்புக்கு அந்த ஆச, அந்தத் தேவை இருக்கத்தானே செய்யும். ஆனா அவ அத பெரிசா எடுத்துக்காமலேயே தான் இருந்தா. ஏதோ அன்னைக்கு அந்த ஒரு நிமிஷத்துல சின்னதா ஒரு தடுமாற்றம் வந்திருக்கனும். அது தப்பேயில்லை. அன்னிக்கு தப்பா எதுவும் நடந்திருந்தா, அது கூட தப்பில்லை. ஆனா நீ ஒரு நாளும் அவளை தப்பா நினைச்சிறாதே.

என்னண்ணே இப்படி எல்லாம் பேசுற. நானாவது மதினியை தப்பா நினைக்கிறதாவது. நாஞ்சின்னப் பையன். அதான் எப்படி நடந்துக்கனும்ன்னு தெரியலை. இனிமே நா மதினிகிட்ட நல்லா பேசுவேன். அன்னைக்கு அந்த நிமிஷத்தில் இருந்த படபடப்பு அடங்கினப்புறம் எம்மனசு கொஞ்சம் சஞ்சலப்பட்டது என்னவோ நெசந்தாண்ணே. அதுக்காக என்னை மன்னிச்சிரு. அந்த சஞ்சலத்திலேர்ந்து வெளியே வர்றதுக்கு கொஞ்ச நாளாயிருச்சு. அவ்வளவு தான்.

மதினி உன்னய விட்டுப் போகாததுக்கு காரணமிருக்குண்ணே. மேரேஜ்ங்கிறது ஒரு இன்ஸ்டிடியூஷன். ஒருத்தரோட தப்போ அல்லது சஞ்சலமோ அதைக் கெடுத்துறக் கூடாது. இதைத் தான் மதினி செஞ்சிருக்கான்னு நா நினைக்கிறேன். உன்னோட கவலைக்கும், மதினியோட நெலமைக்கும் எங்கிட்ட ஆறுதலா ஒரு வார்த்தை கூட இல்லைங்கிறது தான் நிசம். உங்க ரெண்டு பேரையும் பாத்து இப்படி ஒரு ஜோடியான்னு நான் பல தடவை பொறாமை கூட பட்டிருக்கேன். ஆனா உங்களுக்குள்ள இப்படி ஒரு தீராத சோகம் இருக்கும்ன்னு யாருக்குத் தெரியும்.

நா ஒண்ணு சொல்லவா. இது சரியாண்ணு கூட எனக்குத் தெரியலை. இருந்தாலும் நாஞ்சொல்லுறேன். ஒரு குழந்தையை தத்தெடுத்துக்கோண்ணே. மதினிக்கும் உனக்கும் அது ஆறுதலா இருக்கும். உங்களோட பிரச்சினைகளுக்கு அது தீர்வில்லைன்னு எனக்குத் தெரியும். இருந்தாலும் அது உங்க பிரச்சினைகளை மறக்கறதுக்கு உதவியா இருக்கும்.

எனக்கு மதினி மேல கொஞ்சங்கூட தப்பான எண்ணம் இல்லைண்ணே. நீ இத மதினிகிட்ட சொல்லிரு. நா கேக்காட்டாலும் நீ கண்டிப்பா சொல்லிருவேன்னு எனக்குத் தெரியும்.

பரமு அண்ணனுக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை. வெகுநேரம் அமைதியாய் உட்கார்ந்திருந்தான். நான் மெல்ல கீழிறங்கிப் போனேன்.

எங்கள் வீட்டுக் கிரஹப்பிரவேசத்திற்குப் பின் மதினியும் அண்ணனையும் அடிக்கடி பார்க்கும் வாய்ப்பு மிகக் குறைந்து போனது. எப்பவாவது பண்டிகை தினங்களில் அதுவும் அத்தி பூத்தாற் போல் என்றாகிவிட்டது. இதற்கிடையில் அப்பா ஹார்ட் அட்டாக்கில் இறந்து போனார். அன்று தான் மதினியையும் அண்ணனையும் கடைசியாய் பார்த்தது. அதற்குப் பின் இதோ இன்று கண்ணாஸ்பத்திரியில் பார்க்க முடிந்தது.

மதினி அம்மாவிடம் அவள் கண் பிரச்சினையைப் பற்றி கேட்டுக் கொண்டிருந்தாள். பரமு அண்ணன், அவனுடைய கண்ணில் வந்த ப்ரஷருக்கு டாக்டரிடம் காட்டுவதற்காக டோக்கன் வாங்கிக் கொண்டு மதினியை தேடிக் கொண்டு வந்தவன் எங்களைப் பார்த்தும் சந்தோசமாகிப் போனான். அண்ணன் நிறையவே மாறியிருந்தான். அம்மா மதினிக்குக் காப்பி வாங்கி வரும்படி என்னை அனுப்பினாள். அண்ணன் நானும் வாறேன் என்று என் கூட நடக்க, நாங்களிருவரும் ஆஸ்பத்திரியிலிருந்த கேண்டீனை நோக்கிப் போனோம். ●

# முடிவின் முன்னுரை



கொஞ்சம் அமைதியாய் இருங்கள்
நான் மரணத்தோடு
பேசிவிட்டு வருகிறேன்.

என் முன்னே தெரியும்
பூனையின் கால்களை கட்டி
மதிலில் ஆணியடித்து
அசையாமல் வைக்கவேண்டும்.
பின் மரணக் குகைக்குள்
இறுகிய மனதோடு நுழைந்து
துண்டு துண்டாக வெட்டிக்கிடக்கும்
ஆன்மாக்களின் மௌனத்தோடு
பேசிப்பார்க்க வேண்டும்.
அலைகள் உடைந்த
நீர்க்குமிழ்களை நிரப்பிய
காற்றுதானா என்பதை
கண்டறிய வேண்டும்.
சிதறிய சப்தங்கள் எங்கே போய்
உறைந்து போனது என்பதை
உணர்ந்தறிய வேண்டும்.

இப்போது நீங்கள் போகலாம்
உங்களால் செலவழிக்கப்பட்ட நிசப்தம்
என் சேமிப்பின் வெறுமை நிரப்பி
சப்தமிட தொடங்கிவிட்டன.

**– ஜி. அன்பழகன்**

# தரைமேல் நடக்கும் தாவரங்கள்



பரிணாம வளர்ச்சியில்
செடிகளும் மரங்களும்
நடக்கக் கற்றுக் கொண்டுவிட்டன!

எங்கு தண்ணீர் கிடைக்கும்
எங்கு சத்தான உணவு கிடைக்கும் என
தேடிச் சென்று உண்ணத் தொடங்கிவிட்டன!

வெட்டவரும் மனிதர்களிடமிருந்து
சட்டென தப்பி ஓடி விடுகின்றன!

மேய்ந்து கொண்டே நடக்கும் மாட்டின் மீது
அமர்ந்துக் கொண்டே செல்லும் காக்கை போல்
நடந்து கொண்டே இருக்கும் மரத்தின் மேலாகப்
பறந்து கொண்டேயிருக்கின்றன பறவைகள்!

ஆலமரங்கள் தன்
ஆக்டோபஸ் கரங்களால்
திருடர்களையும் கொலைகாரர்களையும்
கையூட்டுப் பெறுவோரையும்
நன்றி மறந்தோரையும்
மூச்சிறுகக் கட்டிப் போட்டு விடுகின்றன!

சுவாசப் பயிற்சியும்
தியானமும் தவமும் செய்யும்
சக்தி வாய்ந்த மரங்கள்
முனிவர்களாகி
தீய மனிதர்களைச் சபித்துவிடுகின்றன

அப்படிச் சபிக்கப் பட்ட மனிதர்கள்
மண்ணில் பாதம் புதையுண்டு
நகரவியலாமல் நிற்கிறார்கள்!

மரங்கள் தாம்
தண்ணீர் எடுத்துச் சென்று
அவர்களின் புதைந்த பாதவேர்களில்
ஊற்றுகின்றன!

**–து.வி.அன்பழகன்**

---

நீரில் மூழ்குகிறது இவ்வுலகம்
மனிதன் போலொரு கண்ணாடியில்
காலத்தை அளக்கிறேன்
உணர்ச்சித் தோனியில்
வெளிறிய விம்பம் தன்னிகழ்கிறது
யாருடைகிறார்கள்
யாருடைக்கிறார்கள்
கத்திக் கொண்டிக்கிறது அக்கடல்
பிரியத் துடிக்கும் கரங்களுக்கு
தளதளக்கும் நாவிருந்தது
உடைந்து நொறுங்கிய
பொற்கணமொன்று
பூரணியாய் சுழல்கிறது

ஈரம் கசிந்த
குஞ்சுச் சிறகொன்றையும்
குனிந்து பொறுக்கிய
சிறுமியையும்
வரையத் தொடங்கிய
என் மகள்
இறுதியில் என்னுள்
கடலைத் தீட்டினாள்

**– தமிழ் உதயா**

---



» **தளவை இளங்குமரன்**

# அந்தநாள் ஞாபகங்கள்!



தோளிலே புத்த கப்-பை
தொளதொள சட்டை, தூக்கு
வாளியில் பழைய சோறு
வைத்துமே பள்ளி செல்லல்!

காலையில் வெறுங்கா லோடு
கழனியின் வரப்பில் செல்ல
பாலெனப் பசும்புல் ஈரம்
பாதத்தில் செருப்பாய் ஒட்டல்!

ஏழைகள் சீமான் என்ற
ஏற்றத்தாழ் வெதுவும் இன்றித்
தோழமை உணர்வில் ஒன்றித்
தூய்மையாய்க் கல்வி கற்றல்!

சாதிகள் மதபே தங்கள்
சார்ந்திடா மகிமைப் பாடம்
ஓதியே மதியம் வந்தால்
உணவினைப் பகிர்ந்து உண்ணல்!

மாலையில் தினமும் ஊரின்
மந்தையில் கபடி, சாலை
ஆலிலே ஊஞ்சல் கட்டி
ஆடியே உவகை கொள்ளல்
வேனிலில் கோடைக் கால
விடுமுறை நாளில் நித்தம்
ஊனுடல் கறுத்துப் போக
ஊரெலாம் வெயிலில் சுற்றல்!

கேணிகள் குளங்கள் ஏரி
கிடைத்ததில் ஆசை தீர
மேனியில் சிறுதுண் டோடு
மீனெனத் துள்ளி நீந்தல்

வறுமையின் இருளை ஓட்ட
வாய்த்தமண் ணெண்ணெய் விளக்கில்
இரவினில் வீட்டுப் பாடம்
எழுதியும் படித்தும் முடித்தல்!

ஏணியில் மொட்டை மாடி
ஏறியே பாயைப் போட்டு
வானிலா பார்த்த வாறு
வசதியாய் உறக்கம் போடல்!

வேலைத் தேடிக் கொண்டு
வெளியூர்க்கு வந்த பின்னே
ஆலையாய்ப் பிழியு தம்மா
அந்தநாள் ஞாப கங்கள்!



பொன். திருஞானமூர்த்தி.

# ‘முடிச்சுகள் தாண்டி ஓடும் வாழ்வு’

தாய் தந்தையை இழந்து அனாதையாகிவிட்ட பொன்னம்மாவை தன்வீட்டிலேயே வளர்த்து ஆளாக்கி தன் மூத்த மகன் கைலாசத்திற்கு கல்யாணம் செய்த கையோடு கடமை முடிந்ததென கண்ணை மூடி விட்டார் தணிகாசலம்.

கொளுந்தன் சின்னத்தம்பியையும் கணவனின் வயசுக்கு வராத தங்கை மல்லிகாவையும் வளர்த்து கரைசேர்ப்பது பொன்னம்மாவின் கடமையாய் போனது.

சொத்து சுகத்திற்கு பஞ்சமில்லை. நஞ்சை புஞ்சையென நூறு ஏக்கர். வயக்காட்டில் வேலையாட்கள், ஆடு மாடு மேய்க்கவென பத்துப்பேர்கள். வருடங்கள்தான் ஓடியதே தவிர பொன்னம்மா வயிற்றில் ஆசைக்குகூட புழுப்பூச்சி உண்டாகவில்லை. ஆகிவிட்டது அவளுக்கும் கல்யாணம் ஆகி மூன்று வருடம்.

பின்னொரு நாளில் ஆளாகியிருந்த மல்லிகாவை பக்கத்துவூரில் கொடுத்து அந்தவீட்டு பெண் கல்யாணியை கொளுந்தனுக்கு கல்யாணம் செய்து வைத்தாள் பொன்னம்மா.

வந்தவளுக்கும் பொன்னம்மாளுக்கும் வந்தநாள் முதலே ஏழாம் பொருத்தமாகிவிட்டது. எதற்கெடுத்தாலும் அடிக்கடி வீட்டில் சண்டையும் சச்சரவுகளும். அதைப்பார்த்த கைலாசம் நல்லாயிருக்கும் போதே அவனவனுக்கு உண்டானதை பிரித்து கொடுத்துவிடலாமென சொந்தபந்தம், உற்றார், உறவினர், ஊர் நாட்டாமை எல்லோரையும் வரவழைத்து எந்தவொரு வில்லங்கமும் இல்லாமல் சொத்தை பிரித்து கொடுத்துவிட்டார்.

அப்போதும் அப்பப்போ அரசல்புரசலாக சண்டைகள் வந்தாலும் அண்ணன் தம்பி இருவரும் அதைக் கண்டு கொள்வதில்லை. யாரு செய்த பாவமோ பொன்னம்மா வயிற்றில் ஆறேழு வருஷம் ஆகியும் குழந்தை இல்லாமலே போனது. அதைப்பற்றி கைலாசமும் பொன்னம்மாளும் ஒருநாளும் கவலைப்பட்டதாகவே இல்லை.

வந்தவளோ வருஷத்திற்கு ஒன்றாக வஞ்சனை இல்லாமல் ஆம்பளப்புள்ளைய ரெண்டும் பொம்பளப் புள்ளைக இரண்டுமாக மாறிமாறி பெற்றெடுத்தாள்.

கைலாசமும் பொன்னம்மாவும் பார்க்காத வைத்தியர்களில்லை சுத்துப்பட்டியில் இருக்கும் எல்லா நாட்டு வைத்தியர்களையும் பார்த்தாயிற்று. அவர்களுக்கு குழந்தை பாக்கியம் இல்லையென முடிவானபோது உனக்கு நான் குழந்தை எனக்கு நீ குழந்தையென்றே இருவரும் காலம் கடத்தினார்கள்.

சொத்தில் பாதியை தம்பிக்கே எழுதி கொடுத்து விட்டார்கள் கைலாசமும் பொன்னம்மாவும். ஒருநாள் தம்பியிடமும் கல்யாணியிடமும் “ஏண்டா தம்பி எங்களுக்குத்தான் குழந்தை இல்லையே, உன் பெரிய மகனை கொடுங்களேடா. நாங்களே வளர்க்கிறோம். நாங்கள் என்னடா செய்யப்போறோம் கடைசிகாலத்தில சொத்து பத்தெல்லாம் உங்களுக்குத்தானே ” என்றார்கள்.

அவர்களும் சொத்து வேறு யாருக்கும் போயிடக்கூடாதே என்ற பேராசையில் சம்மதித்தார்கள். அப்போது முதல் கல்யாணிக்கும் பொன்னம்மாவுக்கும் சண்டை சச்சரவுகள் குறைந்து போயின.

நல்லாத்தான் போய்க்கொண்டிருந்தது இரு குடும்பத்தின் வாழ்க்கையும். பின்னொருநாளில் கல்யாணிக்கும் பொன்னம்மாவுக்கும் ஏதோவொரு உப்புச்சப்பு இல்லாத காரணத்தினால் சண்டைவந்து ஏழரை ஆரம்பமானது.

அப்போதுதான் கல்யாணியின் வாயிலிருந்து அந்த வார்த்தை வந்திறங்கியது. முதன்முதலாக அந்த வார்த்தையைக் கேட்ட பொன்னம்மாவுக்கு தனக்கு குழந்தை இல்லையே என்ற குறையைவிட அவள் குத்திக்காட்டிய சொல் இதயத்தை துளைபோட்டு ரணப்படுத்தியது.

பொம்பள சண்டைக்கெல்லாம் ஆம்பளைங்க தலையிடக் கூடாதென அண்ணன் தம்பி இருவரும் அதைக் கண்டு கொள்வதே இல்லை. அப்படியென்ன வார்த்தை கல்யாணி சொல்லிவிட்டாள். அடிக்கடி சண்டையில் ‘‘அதாம் ஆண்டவனா பார்த்து உனக்கு

> ஒரு நல்லநாளில் விமர்சையாக இல்லாமல் எளிமையாக பக்கத்துவூரு கோயிலில் கல்யாணம் முடிந்து வீடுவந்து சேரும்போது தம்பி பொண்டாட்டியின் கண்கள் சிவந்துபோயிருந்தது. தனக்கு வரவேண்டிய சொத்துக்கள் எல்லாம் இப்படி வீணாகப் போகிறதே என வருந்தினாள்.

புள்ளைக்குட்டி இல்லாம செஞ்சிட்டான். நீ என்னைக்கு செத்தாலும் என் பெரிய மகன்தானடி உனக்கு கொள்ளி போடணும். மானங்கெட்ட மலடியே” என்பாள். அதையே சாக்காக வைத்து ஏதாவது சின்ன சண்டையென்றாலும் குத்திக்குத்தி காட்டி மனதை நோகடித்தாள்.

இவளை இப்படியே விடக்கூடாது. இதற்கு ஒரு வழிசெய்தே ஆகவேண்டுமென கங்கணம் கட்டியிருந்தாள் பொன்னம்மா. ஒருநாள் கைலாசம் சந்தோசமாக இருக்கும்போது மெதுவாக அந்த பேச்சை எடுத்தாள். ‘‘என்னங்க உங்க தம்பி பொண்டாட்டி எப்பப்பாரு சதா நீ செத்தாக்கூட என்புள்ளதான் கொள்ளிபோடனுமுன்னே சொல்லி என் மனச கலங்கடிக்கிறா. அதுக்கு ஏதாவது ஒரு வழி பண்ணுங்க.”

“நாம வாங்கிவந்த வரம் அவ்வளவுதான். அதையெல்லாம் பெருசுபடுத்தாத பேசாம வேலையப் பாரு”

‘‘அதில்லைங்க நமக்கு புள்ளைங்க இல்லாததினாலே தானே அப்படி குத்திக்காட்டறா. நமக்குன்னு ஒரு புள்ளயிருந்தா அப்படிப் பேசுவாளா?”

“அவள் சொன்னா சொல்லிட்டு போகட்டும். அதுதானே உண்மையும் கூட. நீ செத்தா அவளுடைய மூத்தவனும், நான் செத்தா சின்னவனும்தானே நமக்கு கொள்ளி வைப்பாங்க. மனசபோட்டு குழப்பிக்காதே. பேசாம வேலையப்பாரு”

“அதில்லைங்க..அது வந்து......”

“என்ன வந்து போயி... என்னான்னு சொல்லு”

“இல்லைங்க நமக்குன்னு ஒரு வாரிசு........ “

‘‘அடியே அதான் இல்லைன்னு முடிவாயிடுச்சே.....”

“இல்லைங்க, நானொன்று சொல்கிறேன். கேளுங்க.... நீங்க பேசாம இன்னொரு கல்யாணம் பண்ணிக்கங்க....”

“அடியே உனக்கு பைத்தியம் கியித்தியம் புடிச்சிருக்கா.... “

“ஆமாம் பைத்தியம் தான் புடிச்சிருக்கு. நீங்க என்ன செய்வீங்களோ ஏது செய்வீங்களோ எனக்கு தெரியாது. ஒரு பொண்ணைப் பார்த்து கல்யாணம் செய்து ஒரு புள்ளைய பெத்துக்கொடுத்தாதான் என் மனசு ஆறும்...”

“அடியே கூறுகெட்டவளே, வேறவேலையில்ல உனக்கு. அதுவும் இந்த வயசுல கல்யாணமாம் கல்யாணம். ஊரு என்னைப் பார்த்து சிரிக்காது. பைத்தியக்காரி. இன்னொருமுறை அந்த வார்த்தை சொன்ன.... நடக்கிறதே வேறு. ஆமா சொல்லிட்டேன்.” அந்த இடத்தைவிட்டு நகர்ந்தார் கைலாசம்.

‘‘அப்பாடா ஒருவழியாக காதில் போட்டுவிட்டேன். இனி ஆகவேண்டியதை நான் பார்த்துக்கொள்கிறேன்.” அடுத்த நாளிலிருந்து பொண்ணு பார்க்கிற வேலையை தன் தூரத்து சித்தப்பாவை வரவைத்து கைலாசத்திற்கு தெரியாமலே ஆரம்பித்தாள் பொன்னம்மா.

அவரும் அங்கே இங்கேன்னு மாசக்கணக்கா தேடி ஒரு பொண்ணை அவள் அப்பனிடம் விவரம் எல்லாம் சொல்லி பேசிமுடித்து பொன்னம்மாவிடம் சொன்னார். அதை நம்பவே முடியாமல் தனக்கு பிள்ளையே பிறந்தது போல ஆனந்தத்தில் திக்குமுக்காடிப்போனாள்.

நல்ல சமயமாக பார்த்து பொன்னம்மாவும் அவள் சித்தப்பாவும் கைலாசத்தின் காதில்

சங்கதியை ஓதினார்கள். அதைக்கேட்ட கைலாசம் ஆகாயத்திற்கும் பூமிக்குமாக ருத்ரதாண்டவம் ஆடினார்.

“ஏன் மாமா அவதான் பைத்தியக்காரி போல சொல்றான்னா அவ பேச்சை கேட்டு நீயும் அந்த வேலைய பார்த்திருக்கிறாயே.”

“அவ சொல்வதில் தவறில்லை மாப்ள. அவள் சொல்வதிலும் ஞாயம் இருக்கிறது. நமக்குன்னு ஒன்னு இருந்தா உன் தம்பி பொண்டாட்டி அதுமாதிரியெல்லாம் குத்திக்காட்டுவாளா?”

‘‘சரிமாமா வருகிறவ நல்லவளா இருக்கனுமே. அவ வந்தவுடன் சட்டி பானையென தனிக்குடித்தனம் போகனுமுன்னு சொல்லிட்டா”

பொன்னம்மா குறுக்கிட்டு ‘‘அப்படியே போனாலும் போகட்டும் சித்தப்பா. எப்படியாவது எங்க குடும்பத்துக்குன்னு ஒரு வாரிசு வேண்டும்” என்றவளை வேதனையோடு பார்த்து கைலாசம் “சரி மாமா எப்படியோ அவளுடைய ஆசையை ஏன் கெடுப்பானேன். ஆகட்டும், ஆகவேண்டியதை பாருங்க” என்று கட்டாந்தரையில் இருந்த மாடுகளை பிடித்து மேய்ச்சல் காட்டில் கட்டுவதற்கு கிளம்பினார்.

ஒரு நல்லநாளில் விமர்சையாக இல்லாமல் எளிமையாக பக்கத்துவூரு கோயிலில் கல்யாணம் முடிந்து வீடுவந்து சேரும்போது தம்பி பொண்டாட்டியின் கண்கள் சிவந்துபோயிருந்தது. தனக்கு வரவேண்டிய சொத்துக்கள் எல்லாம் இப்படி வீணாகப் போகிறதே என வருந்தினாள். பொன்னம்மாவோ வந்த மகராசியை தன் சொந்த தங்கையைப்போலவே மனசு நோகாமல் வைத்திருந்தாள்.

கல்யாணம் முடிந்த மறுநாளே தன் மூத்த மகனை தன்வீட்டுக்கே அழைத்துக்கொண்டாள் கல்யாணி. கல்யாணம் முடிந்த அடுத்த வருடமே பொன்னம்மாவின் கனவை துளசி முதன்முதலாக அதுவும் ஆம்பள புள்ளையாக பெற்றுக்கொடுத்து நிறைவேற்றியபோது பிறவிப்பயன் பெற்றது போல பெருமகிழ்ச்சி அடைந்து துளசியின் கன்னங்களில் ஆனந்த முத்தமழை பொழிந்தாள் பொன்னம்மா.

ஊர்மக்கள் பொன்னம்மாவின் வைராக்கியத்தை நினைத்து ஒருபக்கம் பெருமைப்பட்டாலும் நல்ல குணவதிக்கு ஆண்டவன் ஒரு பிள்ளையை கொடுக்காம செய்துவிட்டானே என வருத்தப்படாதவரே இல்லை.

பொன்னம்மாள் துளசியை எந்த வேலையும் செய்யவிடுவதில்லை. மகாராணி போல உட்காரவைத்து அவளுக்கு தேவையான அனைத்தும் பொன்னம்மாவே செய்வாள். பிள்ளை பெற்றதோடு சரி குழந்தையை குளிக்கவைப்பது. புட்டிப்பால் கொடுப்பது, தூங்கவைப்பது. கொஞ்சுவதென எல்லாமே பொன்னம்மாதான். அவளிடமே குழந்தை ஐக்கியம் ஆகிப்போனது. அடுத்தடுத்த வருடங்களில் வஞ்சனை இல்லாமல் நான்கு ஆம்பளப்புள்ளைகளை பெற்றுவிட்டு தன் கடமை இத்தோடு முடிந்ததென பெயர் தெரியாத பெருநோய் வந்து படுத்த படுக்கையாய் படுத்துவிட்டாள் துளசி. தான் உயிரோடு இருக்கும்போதே ஒருவனுக்காவது கல்யாணம் செய்து பேரக்குழந்தைகளை பார்த்துவிடலாமென ஆசை ஆசையாய் இருந்த துளசிக்கு பேரிடியாய் வந்திறங்கியதோர் மழைக்கால குளிரில் மரணம்.

மனக்குறையை தீர்த்து வைத்தவள் இப்படி அல்ப ஆயுளோடு போய்விட்டாளேயென வேதனைகளோடும் தாயில்லாத பிள்ளைகள் தறுதலையாக போய்விடுமேயென உற்றார் உறவினர் சொல்லக்கூடுமென மிகவும் அன்போடும் பாசத்தோடும் இருந்தாள் பொன்னம்மா. ஆறேழு மாதங்களுக்கு பிறகு மூத்தவனுக்கு ஒரு நல்ல இடமாக பார்த்து கல்யாணம் முடித்தாள்.

அடுத்தடுத்து மற்ற மூவருக்கும் கல்யாணம் முடித்து கையோடு சொத்து பத்தும் பிரித்துக்கொடுத்து ஆளொக்கொருமாதம் பிள்ளைகள் வீட்டில் சாப்பிட்டுக்கொள்ளலாம் என்ற நாட்டாமை தீர்ப்புக்கு இணங்க காலம் கடந்த போது மருமகள்களின் போக்கு பிடிக்காமல் எங்கே தன் பிள்ளைகளுக்கு கெட்ட பெயர் வந்துவிடுமோ என்று பயந்து காசிக்கு போய்வருகிறோமென சொல்லிவிட்டு பொன்னம்மாவும் கைலாசமும் போய் முப்பது வருஷமாச்சி இன்னமும் அவர்கள் திரும்பி வந்த பாடில்லை. எட்டுதிக்கும் வலைபோட்டு தேடிவிட்டார்கள். கிடைக்கவே இல்லை. பிள்ளைகளோடு சேர்ந்து ஊரும் உலகமும் அவர்கள் என்றாவது ஒருநாள் வருவார்கள் என இன்னும் நம்பிக்கிட்டுத்தான் இருக்கிறாங்க.

நம்பிக்கைகளில்தானே வாழ்க்கை ஓடுகிறது அவ்வப்போது விழும் அவிழ்க்க முடியாத முடிச்சுகளையும் மீறி. •



## இல்லாததும்–இருப்பதும்!

வட்ட வட்ட வளையமாய்
வெண்பனி மேகமாய்,
புகை தமக்குப் பகை எனத் தெரிந்தும்
மிக நேர்த்தியாய் ரசித்து ரசித்து
வெள்ளை சுருட்டு சிகரெட்டை
புகைத்துக் கொண்டிருந்தான்...
அந்த பொது இடத்தில்
யாரைப் பற்றியும் கவலையுறவில்லை ,
அவனுக்கு வயது இருபது இருக்கலாம்..
மிதிவண்டியில் வேகமாய்
வந்த இன்னொருவர்
சடாரென வண்டியை விட்டிறங்கி
அவசரமாக சட்டைப் பைக்குள் கை விட்டு
பாதியில் அணைந்திருந்த பீடியை எடுத்து
சிறுவனிடம் பற்ற வைக்க தீ கேட்டார்
அவன் சற்று கையைக்காட்டி நிறுத்தி
மீண்டும் ரசித்து புகைத்து
ஓரிரு வளையங்களை அவர் முகத்தின்
முன்னே விட்டவாறே சிகரெட்டை
நீட்டினான்
எவ்வித பதற்றமுமில்லாமல் வாங்கி
சுள்ளென ஓர் இழுப்பு இழுத்து
தன் பீடியை பற்றவைத்தவாறே
மிதி வண்டியை நகர்த்தினார்...
அவருக்கு வயது அறுபது இருக்கலாம்....
மூன்று தலைமுறை
இடைவெளியிருக்கும் அவர்களுக்குள்
எந்த நெருடலுமில்லை...
பார்த்துக்கொண்டிருந்த
எனக்குள்தான் ஏதோ நெருடியது!

– செ.ச.பிரபு.

## தாயும் சேயும்..!

வாலாட்டி வளைந்து நெளிந்து
சூம்பிப்போன தாயின் பால்மடிதேடி
ஓடுகிறது வற்றிப்போன வயிறுடை
ஒரு செவத்த நாக்குட்டி....!

மடிதரமறுத்து மெதுவாக தட்டிவிட்டு
மீண்டும் நாவால் துழாவி
மருண்டழைக்கிறது
அதே வண்ணமுடைய தாய் நாய்..!

"ம்க்கும்" செல்லச்சிணுங்கலாய்
தாயும் சேயும்..!
கண்ட கண்களின் ஓரமாய்
நமையறியாது உருள்கிறது
உருள் பெருநீர்....!

– ப. தாணப்பன்



» பெ.புருசோத்தமன்

## வணிக மரபும் தமிழர் அறமும்

# தமிழருக்கும் – சுமேரியருக்கும் உள்ள நாகரீக தொடர்பு!

மனிதனின் பரிணாம வளர்ச்சி, உடல், சமுதாயம், கலாச்சாரம் (*anthropology, Sura's Tamil Dictionary*) இவற்றின் மூலம் சில கூறுகளை, வணிகம், அறம், பொருள், மொழி, கவிதை என, இவற்றிக்கான, தமிழருக்கும் சுமேரியருக்கும் உள்ள சில நாகரீக தொடர்புகளை காண விழைகின்றோம். இதன் பொருட்டு மொழிகளுக்குள்ள சில ஒற்றுமைகளும், வணிகத் தொடர்பும் ஆராய வல்லது.

சுமேரிய மொழி ஆராய்ச்சியாளர் பலரும் அம்மொழி புழக்கத்தில் இல்லாமல் இறந்து போனதாகக் கருதினர். அம்மொழியின் சீர்ச்சொற்கள் உலகின் பல மொழிகளிலும் காணப்பட்டாலும், அவ்வாறு காணப்பட்ட மொழிகளில்தான் சுமேரியர் பேசினர் என்பதற்கு ஆதாரம் போதுமானது அற்றது என்றனர். தமிழ் அறிந்த சதாசிவம், லோகநாதன் முதலானோர் சுமேரிய-தமிழ் மொழிகளுக்கு இடையேயான தொடர்பை தெரிவித்தனர். இதன்பிறகு புருசோத்தமன் முதலானோர் இவர்கள் பேசியது தமிழே என்று சில கருத்துக்களை முன்னிட்டனர். சுமேரியரும் இந்து சமவெளி மக்களும் வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என மொழி வல்லுனரும், அகழ்வாராய்ச்சி வல்லுனரும் தெரிவித்தனர்.

இங்கு நம் தமிழ்நாட்டில் நாம் அனைவரும் அறிந்தது: தமிழரின் லெமூரியா கண்டம், கடல் கொண்டதும், இந்து சமவெளி மக்கள் திராவிட மொழியினரும் என்பது. நாம் அறியாதது: சுமேரியர் தமிழ் பேசினரா? இங்கு வாழ் தமிழருக்கும், சுமேரியாவில் வாழ்ந்த மக்களுக்கும் தொடர்பு யாது? என்பதே!

சமீப கால மரபு அணு ஆராய்ச்சி முடிவுகள் அரபு நாடுகள், இந்து சமவெளி மக்கள், இந்தியாவில் உள்ள மக்கள், இவர்களுக்கான தொடர்பும், வந்த வழித்தடமும் தெரிவிக்கின்றனர், மற்றும் சுமேரியாவில் வாழ்ந்த மக்கள் எங்கிருந்து வந்தனர் என்பதும், அவர் நாடு அழிவுபட்ட காலத்தில் அவர்கள் எங்கு சென்று குடியேறினர் என்பதும், இன்றும் உறுதியாக கூற இயலாது என்கின்றனர். இவையும் மேலும் ஆராய்ச்சிக்கு உரியவை.

லோகநாதன், சுமேரியர் சங்கம் வைத்து தமிழ் வளர்த்தனர், துப்பு போன்ற பல தமிழ் சொற்களும் காணக்கிடைக்கிறது என்கிறார். புருசோத்தமன் - சுரேஷ் இவர்கள் சுமேரியர் துப்பு இல்லம் பயிலகம் (*e-dub-ba-a*), நமது சமீப காலத்து திண்ணைப்பள்ளி குருகுலம் போல் இயங்கியதாக இருக்கலாம் என்கின்றனர். இவர்களுடன், மேனன் என்பர் இணைந்து தமிழுக்கும் -சுமேரிய மொழிக்கும் உள்ள தொடர்பும், சுமேரியரின் -தமிழ் மொழியின் அரிச்சுவடியின் அட்டவணையும் எடுத்துரைக்கின்றனர். மேலும், சூல்கீ என்ற அரசன் கூறிய தன் நூலகத்தின் பெயர் '*gir-gen-na*' என்பது தமிழே, அது, கிறுக்கினவை என்றும் எடுத்துரைக்கின்றனர். அவற்றின் தொடர்பாக நாம் சில வணிக சம்பந்தப்பட்ட சொற்களை கவனிக்கலாம் (இங்கு ஆங்கிலத்தில் ஒலி வடிவமும், பொருளும் அதை தொடர்ந்து தமிழ் சொற்களும் கொடுக்கப்பட்டுள்ளது):

*Dub ›› Tablet, Search, Heap-up, Smash ››* துப்பு (களிமண் தட்டில் எழுதிய துப்பு கருத்து), துப்பறிதல், துப்பு தானிய கூடம், கூளம் கூம்பு, தப்-தப் என அடித்தல்.

*Sag ›› Head, Person, Capital ››*சங்கு, சங்கம்- தலை, கழுத்து, முதலீடு, தலைமை

*Dam ›› Spouse ››* தம்பதி, தமள்,

*Dum-dam ›› Clamour ››* தூம் - தாம் (ஆடம்பரம்)

*Dam-gar ›› Merchant ››* தாம் -விலை, தம்படி காசு, தம்பம் - கம்பம் அடித்தல் -விவசாயம், தமனியம் - பொன் , தம்பனகாரன் மந்திரவாதி

இதனை தொடர்ந்து சுமேரியரின் ஆரம்பகாலத்தில் (சுமார் 3000 கி.மு) அய்யன் மெருகர் (*En merkar*) என்னும் அரசன் விலைப் பொருட்களையும் தூதுவனையும் துப்பு கொண்டு அனுப்பியதிலிருந்து சில வரிகளை கவனிப்போம் :



அதாவது, தூதன் ஆரட்டா (*Aratta*) ஆரை + அட்டாணி, கோட்டை கொத்தளம்) அணுகியதும் மக்கள் திரண்டு, வியப்பாக, கழுதைகளின் மேல் ஏற்றி வந்த பொதிகளை, தானிய வகைகளை பார்த்தனர்; தூதுவர் அப்பொருட்களை தாராளமாக அளந்து நகரத்தின் மையத்தில் வைத்தனர்; இது வானத்திலிருந்து தாராளமாக உபரியாக மழை கொட்டுவது போலும், அனைவரின் பசியையும் போக்குவதாகவும் இருந்தது. மற்றும், கடவுளர் அனைவரும் தம் வேலை முடிந்து இளைப்பாறுவது போலவும், அனைவரது பசியும் அடங்கியதாகவும் இருந்தது.

நாம் மேற்கண்ட குறிப்பில் முக்கியமாக கவனிக்க வேண்டியது - சுமெரியர் வியாபாரம் மட்டிலும் இலாப நோக்கோடு கருதாமல் அனைவரது பசியையும் போக்குவதாக இருந்தது என்பது ஆதலின், போஸ்ட்கேட் (*Postgate*) தன் புத்தகத்தில் வியக்குகின்றார்: "நாம் இங்கு காணுவது ஒரு மன்னருக்கும், மற்றொரு மன்னருக்கும் நடக்கும் நல்லிணக்கம், பரிவர்த்தனைக்கும் மேலாக இருக்கிறது என்று." இது நமக்கு சில திருக்குறள் பாடல் வரிகளை நினைவுக்கு கொண்டு வருகிறது: வாணிபம் செய்வாருக்கு எனத்தொடங்கும் பாடலும் (120), 'சமன் செய்து சீத்துங்குங் கோல் (118)' மற்றும் 'அற்றார் அழிபசி தீர்த்தல் (226)' என்பதாகும். இவற்றை, நாம் மனித குலத்தின், அனைத்து தரப்பு மக்களின் தமிழரின் நாகரீக தொடர்ச்சியாக காணலாம்.

மேலும், துப்பார்க்கு எனத் தொடங்கும் திருக்குறள்; (பாடல்-12) நம் கவனத்தை ஈர்க்கிறது துப்பு என்ற சொல்லை, (*sir* சீர்) ஐந்து முறை பல பொருள் படும்படி பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்த துப்பு என்ற சொல் சுமேரிய மொழியில் '*dub ››* துப்' என்ற ஒலி வடிவில் கிடைக்கிறது, (இதே சொல்லுக்கு அக்காடிய மொழியில் '*tuppu ››* துப்பு' என்றும் '*saraqu ››* சரக்கு)' என்றும் ஒலிவடிவம் கிடைக்கிறது. இந்த சொல் இன்றும் நம் பயன்பாட்டில் இருப்பது, வியப்பை அளிக்கிறது: இவை, களிமண் தட்டில் எழுதிய குறிப்புகள் (*cunieform tablets*), தானிய வகையில் செய்யப்படும் வேலைகள் - கூட்டு, கொட்டு பரப்பு, கூம்பாக செய், மற்றும் சுற்று, திரும்பு, கண்டுபிடி என்பனவாம். இன்றும் நம் வழக்கில் துப்பு துலக்குவது, துப்புசாலி (*dub.sar ›› writer ››* துப்பு சார்பு ) என்று இருக்கிறது.

அக்காடியர் மொழியில் இதை துப்புசாற்று எனக் கொள்ளலாம்.

நம் செய்யுள் இலக்கணங்களில் குறிப்பிடும் 'சீர்' என்ற பதம் சுமேரியர் '*sir* ›› சீர்' என்று பாடல்களுக்கு குறிப்பதாக அறிகிறோம். சுமேரியர் தமிழ்வளர்ச்சிக்காக பள்ளிகள், சங்கங்கள் அல்லது கூடங்கள் அமைந்துள்ளனர் அவற்றில் துப்பு - இல்லம் - பயிலகம் (*e-dub-ba-a*) ஒரு முக்கிய அங்கமாக இருந்துள்ளது. இவ்விலக்கிய படைப்பில், நாம் வியப்பது வள்ளுவர் போலவே இவர்களும் விவசாயம், ஆசிரியர் தொழில்களை போற்றினர் மற்றும், நீர் ஆதாரத்தை பெருக்குவது எப்படி என வினவுகின்றனர்! நாம் விழாக்காலங்களில் காணுவது போல், மாணவரிடையே பட்டி மன்றம் பேச்சு போட்டி நடந்துள்ளது. மற்றும் பாடல் இயற்றுவதற்காக சிறிது இலக்கணம் போன்று குறிப்புகள் உள்ளது. சுமேரிய ஆசிரியர் பலர், அவர்களது படைப்பை முடிக்கும் போது ' *ni-sa-ba* ›› நி-ச-பா' எனும் கடவுளை துதிக்கின்றனர். இது பிற்காலத்தில், குறிப்பாக 'சரிகமபதநிசா'வுக்கும் சரஸ்வதி தேவியின் பெயரும் உருவாக காரணமாக இருந்திருக்க கூடும். '*sa* ' ›› ச என்ற சுமேரியர் சீர் இசை ஒலியையும், கருவியையும் குறிக்கும். சுமேரியன் துப்பில்லம் பயிலகம் படைப்பில் பாடல்வரி எண்72 (ETCSL C.5.1.3 இணையதள சுமேரிய இலக்கிய கருவூலம்) திருக்குறள் பாடல்களை நினைவிற்கும் கொண்டுவருகிறது, இங்கு, அதை அக்காலத்தில் திருக்குறள் எழுதியிருந்தால் எப்படி இருந்திருக்க கூடும் என்பதாக சீர்களை கொண்டு இரண்டு வரியாக்கி கொடுக்கப்பட்டுள்ளது:

*Sila sag gi-a sila-a*

*Ba-an ga ga*

இங்கு *sila* மற்றும் *ga* , துப்பார்க்கு என்னும் குறளில் வருவது போல் ஒரு முறைக்கு மேல், பல பொருளில் உபயோகப்படுத்துப்பட்டுள்ளது. மற்றும், தமிழ் சிலேடை பாடல் என்பது இந்த *sila* ›› சில்லாடல் என்ற சொல்லில் இருந்து வந்திருக்கலாம். இதை சீலை சில், சில என பல பொருள் தரக்கூடியதாக இருக்கலாம். மேற்கண்ட சுமேரிய பாடலை தமிழ் வடிவில் கீழ்கண்டவாறு கொடுக்கலாம்:

சீலை சங்கா கை ஆடை; சில்லாடல்

பாணன் ஆக ஆக!

மேலும், திருக்குறள் பாடல் எண்: *1038* கவனிக்கவும்,

**ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்**

**நீரினும் நன்றதன் காப்பு**

மேற்கண்ட பாடல் மூலம் வள்ளுவர் நமக்கு விவசாயம் கற்றுக்கொடுக்கிறார். இவ்வகையான குறிப்பை நாம் அய்யன் மெருகர் (*En-merkar*) அனுப்பிய தூது குறிப்பிலும் காணக்கிடைக்கிறது, வரி எண்-*362*

*munu a sig-ga-na a-sag*

*mu ni ib-X*

இதை, தமிழ் வடிவில் காணும் போது:

பயிர் முளைக்கும் -நுணுக்கம் அ-நீர் இட்டால்

சிக்கனமாக அ-நீர் -சகதியாக, இளம்பயிர் முளைத்து நிற்கும் - இப்படியாக!

வணிகம் என்றால் எண் கணிதம், குறியீடு, குழுக்குறி இவை இல்லாமலா இருக்கும்? வள்ளுவர் (பாடல் *392*) எண் என்ப ஏனைய எழுத்துதென்பார், அப்பர் சிவனை குறிப்பிடும்போது எண்ணாகி, எழுத்தாகி என்பார். தமிழ் மொழியின் சிறப்பு, அதில் உயிர், மெய், உயிர்-மெய், மாத்திரை ஆகியவை; இவை, மொழிக்கும் , இசைக்கும், கணிதத்தின் கூட்டல் தத்துவத்திற்கும் தலை வாசல். சுமேரிய ஆராய்ச்சி நிபுணர், வாணிபத்தின் பால் ஏற்பட்ட தேவைகளே சுமேரியருக்கு எழுதும் தேவையை, ஊக்கத்தை அளித்தது என்பார்கள். ஆதலின் சுமேரியர் எழுத்து, எண்ணம், எண் இவற்றை குறிப்பிடும் அரும்சொல் பதங்களை கவனிக்க வேண்டியுள்ளது. இவற்றில் சில கீழ் கண்டவாறு!

*sid* ›› *count* ›› சித், சித்து (கூட்டுவதுதான் முதல் சித்து வேலையோ!)

*sab* ›› *sealed bulla, sealed marked clay pots with tokens* ›› *Akk: sippasu* ›› இவைதான் சிப்பம், சிப்பா, புள்ளி என்று வணிகரிடை பழக்கத்தில் வந்ததோ?

*ak* ›› *proceeding* ›› ஆக, ஆக்கு

*ara* ›› *times with numbers, times* ›› அரை மடங்கு

*bala* ›› *conversion* ›› பல

*gu* ›› *square* ›› குணா

*ki* ›› *with* ›› மேல்கை, கீழ்கை

*ennam* ›› *what* ›› எண்ணம், ஏனாம்?

*inim* ›› *word* ›› இனிம், இனிமை

*eme* ›› *tongue* ›› இமி, எமி, இம்மே, எம்மொழி

*eme.gir* ›› *Sumerian language* ›› எம்மே கிறி

*a'a* ›› *a-a* ›› *text* ›› அ-ஆ

*ia* ›› *exclamation* ›› ஐயா, ஐய, அய்ய

*a'ak* ›› *a - ak* ›› *meaning of this is not known to the researchers* ›› அ-முதல் அஃகு வரை

*gu* ›› *sum, total* ›› கூட்டல்

*sa* ›› *pay for* ›› சத்தம் கூலி

*Sumar, Kalam, ka-na-ag, ka-nag*››, *Land* ›› களம், கானகம், கானக் ( *Akk: mattu* ›› மாபெரும் தீவு, திட்டு? )

நாம் மேற்கண்ட கருத்துக்களையும், சீர் சொற்களையும் காணும் போது, தமிழருக்கும் சுமேரியருக்கும் நாகரீக கூறுகளில் தொடர்ச்சி இருப்பதாக தெரிகிறது. இது மேலும் ஆராய்ச்சி செய்ய வல்லது.

போஸ்ட் கேட், கிரமர் இவர்கள் அறிவுறுத்துவது போல் சுமேரியர் பற்றிய ஆராய்ச்சி, முடிவு பெறாமலே உள்ளது: சுமேரியர் எங்கிருந்து வந்தனர், எங்கு புலம் பெயர்ந்து சென்றனர் என்பது இன்னும் உறுதிப்படுத்த படாமல் உள்ளது!

சுமேரியர், நாம் இன்றும் ஆரம்பபள்ளிகளில் படிக்கும் முறையிலையே படம்பார்த்து படிக்கும் முறையும் வணிகர் போல் குறியீடு, குழுக்குறியீடு முறையையும் கையாணடனர் என்பதாக தெரிகிறது: நாம் இன்றும், 'அ' என்றால் 'அம்மா' மற்றும், 'அம்மா' என்றால் 'அ' என்றும் அறிவோம்.

நமது தமிழ் வணிக மக்களான நகரத்தாரின் ஒரு வழக்கு முறையும், சுமேரிய மக்களின் ஒரு வழக்கு முறையும், நாம் ஒப்பிடும்போது பிரமிப்பு ஏற்படுகிறது. இருபாலரும், கோயிலும் அதன் சார்ந்த குடிமுறையும் - கொண்டிருந்தனர். கவனிக்கவும் போஸ்ட்கெட்டு சுமேரியரை பற்றி கூறுவது: "*...with strong local identities expressed in their allegiance to a city god and their pride in the temple.*"

காலமும், மேற்கொண்டு ஆராய்ச்சி மாணவர் புது கோணங்களில் அணுகும்போதுதான் இதற்கு விடை கிடைக்கும். தமிழ் சார்ந்த இலக்கிய களஞ்சியங்கள், சுமேரியர் பேசிய தமிழ் மொழியில் இன்றும் கிடைக்கக் கூடும் எனும்போது நமக்கு பொறுப்பும் அதிகரிக்கிறது. சுமேரியர் பற்றி ஆராய்ச்சி மொழி சார்ந்து மட்டும் இல்லாது, மனித இனம், வளர்ச்சி, வாணிகம், நாகரீகம் மற்றும் அனைத்து துறையும் சார்ந்து இருந்தால் நலம் பயக்கும் என்கிறார் நாதன்-சிவ-கணேசன். முடிக்கும் முன் அய்யன் மெருக்கருக்கும் (*Enmerkar*) அவரின் ஊரான (*ur* ›› *city* ›› ஊர்) உருக்குவுக்கும் (*Uruk*) உள்ள தொடர்பை வியக்காமல் இருக்க முடியவில்லை: கனிமங்கள் கிடைக்க கூடிய இடத்தில்தான் உருக்காலையும் (*Uruk*) மெருகும் (*merkar*) கூட்ட முடியும்.

சுமேரியாவில் முதலில் குடியேறிய மக்கள் வாணிபம் சார்ந்து இருக்கலாம், அல்லது, லெமூர்யா கண்டத்தின் விளம்பில் இருந்த மக்களாக இருக்கலாம் அல்லது இந்து சமவெளி அல்லது அரபிய கடல் கரையோர மக்களாக இருக்கலாம்.

வள்ளுவர் வாழ்ந்த காலம் கி.பி.100 என்பர் சுமேரியரின் ஆரம்ப காலம் கி.மு *5000* எனக்கொள்ளலாம். ஆக இன்றைய காலத்தோடு ஒப்பிடுகையில் வள்ளுவர் *2000* ஆண்டுகளுக்கு முன்னரும், அவருக்கு *5000* ஆண்டுகளுக்கு முன்னர் சுமேரியரின் ஆரம்ப காலம் என்றால், மற்றும் சுமேரியர் பேசியது தமிழ் என்று எடுத்துக் கொண்டால், இன்றும் நாம் பயன்படுத்தும் சொற்களும், வள்ளுவர் பயன்படுத்திய சொற்களும் சுமேரியர் பயன்படுத்திய காலத்தில் இருந்து மாற்றமடையாமல் சீர்கெடாமல் உள்ளது என்பதையும் அறியும் பொழுது, மிகவும் அதிசயமாக உள்ளது! சுமேரியர் அகராதியில் (*ePSD*) உள்ள அனைத்து வார்த்தைகளுக்கும் நம்மால் உடனடியாக தமிழ் உருவை கண்டுப்பிடிக்க இயலாவிட்டாலும், மிகவும் முக்கியமான எழுத்து, எண், வியாபாரம், விவசாயம் போன்ற பலத்துறைகளில் வார்த்தைகளை அறிய முடிகிறது. இவ்வார்த்தைகளின் மூலம், அவற்றின் பரிமாணம், வளர்ச்சி ஆகியவை சுமேரியர் எங்கிருந்து வந்திருப்பர், எங்கு சென்றிருப்பர் என துப்பு விளக்கம் அளிக்கும் என நம்பலாம். இவற்றை பற்றி சிந்திக்கவும், ஆராய்ச்சி புரியவும் இக்கட்டுரை பயன் உள்ளதாக இருக்கும் என்பது திண்ணம். •

# பின்தொடர்ந்த மரம்

ஒரு உச்சிவெயில் பொழுதில்
பொட்டல் வெளியில்
களைப்புற்று நடந்தபோது
யாரோ பின்தொடர்வதறிந்து
திரும்பினேன்.

நிழற்பரப்பியபடி
என் பின்னே நின்றிருந்தது
ஒரு சிறுமரம்.

தாவரங்கள் நகருமாவென
ஆச்சரியப்பட்டு நிற்கையில்
மனிதர்கள் ஓயும்போது
தாவரங்கள் நடந்துசெல்வதும்
நிகழத்தானே செய்யும் என சொன்னது அது.
நீ நிழல் தேடுவதறிந்து
உனக்காக நிழலைக்
கொண்டுவந்தேன் என்றது.

உன் பேரின்பங்களை நீ
பின்தொடர் என்று
எப்போதோ படித்த தத்துவமொன்று
நினைவுக்கு வந்தது.

அதன் கிளைகளைப் பார்த்தேன்
சில பறவைகள் இருந்தன.
பறவைகள் பசியாறிய பின்னும்
ஏகமாய் மிகுந்திருந்த கனிகளில்
ஒன்றிரண்டை மரம் உதிர்க்க
எடுத்துப் பசியாறினேன்.
இனி வீடுவந்து சேர்ந்துவிடலாம் என்ற
உணர்வு வந்தது.

எல்லாம் சரி
எனக்காக என்னைப்
பின்தொடர்ந்த காரணம் பற்றி
மரத்திடம் கேட்க நினைத்தேன்.

அன்றொருநாள்
நீ அருந்திய புட்டியின் மீதத்தண்ணீரை
என் அடிவேரில் ஊற்றியதை
இன்னும் நான் மறக்கவில்லை என்று
இலைகளின் உதடுகள் அத்தனையும்
ஒருசேரச் சொன்னபோது
நான் மரமாகி நின்றிருந்தேன்.

வாழ்க்கை என்னும் பெருங்கனவுக்குள்
வந்துபோகும் சிறுகனவுகளுக்கும்
வாழ்க்கை என்றுதானே பெயர்.

–கீர்த்தி

வாடியப்பூக்கள் சேர்ந்தும்
விலகலுமான விரல்கள்
இடவல மாற்றி நின்ற கால்கள்
வரிசையில் நின்ற தலைகள்
வாடத்துவங்கியப் பூக்கள்
ஐஸ் வண்டிக்காரனின் வரவு
எரிச்சலைத் தந்த
ஆசிரியைகளின் கண்காணிப்பு
ஆவலைத் தூண்டும்
விரைந்த கார்கள் சலிப்புடன்
அதுவரை வராத அமைச்சரின்
வருகையில் சோர்ந்த குழந்தைகள்

– அந்தோணி ராஜன்



# கண்டல்...

ஒரு நாளில் டப்ளின் நகரத்தில் நிகழும் சம்பவங்களை வைத்து உலிஸிஸ் என்ற ஒரு பெரிய நாவலை ஜேம்ஸ் அகஸ்டின் அலோஷியஸ் ஜாய்ஸ் என்ற ஜேம்ஸ் ஜாய்ஸ். [1882 - 1941] எழுதியுள்ளார். எக்ஸ்பிரஷனிஸத்தை முன்வைத்து எழுதப்பட்ட நாவல். நனவோடை உத்தியில், ஹோமரின் ஒதிசியத்தின் பிரதிபலிப்பாக அமைந்த நாவல். ஜாய்ஸ் அதைத் தவிர எ போர்ட்ரெய்ட் ஆஃப் தி ஆர்ட்டிஸ்ட் ஆஸ் எ யங் மேன், எக்ஸைல்ஸ், பின்னகன்ஸ் வேக், சேம்பர் மியூசிக் [கவிதைத் தொகுப்பு], டப்ளினர்ஸ் [சிறுகதைத் தொகுப்பு] போன்ற பல பிரதிகளை உருவாக்கியிருந்தாலும் அவரது மிக முக்கியமான படைப்புகளாகக் கொண்டாடப்படுபவை உலிஸிஸும், பின்னகன்ஸ் வேக்கும்தான். காரணம் அவ்விரு படைப்புகளும் அவரது பிற படைப்புகளை மட்டுமல்லாமல் அதே கால கட்டத்தில் எழுதப்பட்ட பிறரது படைப்புகளையும் மீறிச் சென்றிருக்கின்றன என்பதுதான். ஜாய்ஸ் அவரது கால கட்டத்தில் அறியப்பட்டிருந்த ''இம்ப்ரஷனிஸம்'' என்ற உட்சபட்ச யதார்த்தவியலான "வாழ்க்கையின் ஒரு துணுக்கு" என்ற கருத்தியலை உலிஸிஸ் மூலம் தகர்த்தார். ''பின்னகன்ஸ் வேக்'' பிராய்டின் உளவியல் கனவுக் கொள்கை மற்றும் வரலாற்றின் சுழற்சித் தத்துவம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைக்கப்பட்டது. கதை என்ற திட்டமே இல்லாமல் எல்லாவித மனிதர்களின் அனுபவங்களையும் துண்டு துண்டாகப் பார்க்கும் கதாபாத்திரங்களுடன்,




விலங்கு, தாவரம், தாதுப் பொருட்கள் என்று உருமாறும் கதாபாத்திரங்களுடன் உருவாக்கப்பட்டிருந்தது. "மேக்ஸ் ஈஸ்ட்மென்" என்ற அமெரிக்க எழுத்தாளர் ஜாய்ஸிடம் ''ஏன் இந்த நாவலை இத்தனை சிடுக்கு முடிச்சுகளோடு எழுதியிருக்கிறீர்கள்'' என்று கேட்டதற்கு ஜாய்ஸ் புன்னகையோடு பதில் சொன்னாராம். "இன்னும் முந்நூறு வருஷ காலம் விமரிசகர்களுக்கு வேலை கொடுக்க வேண்டுமல்லவா? அதற்காகத்தான்"

இந்த உலிஸிஸ் தொடர்பாக ஒரு சுவாரசியமான அனுபவம் உண்டு எனக்கு. 1979ல் ஒரு சிறுகதைப் போட்டியில் இரண்டாவது பரிசு வாங்கிய சிறுகதை வெளியான இதழோடு சென்னையில் தெருத் தெருவாக சுற்றிக் கொண்டு சந்திக்கும் நண்பர்களை எல்லாம் அந்தக் கதையை வாசிக்கச் சொல்லித் துன்புறுத்துவது வழக்கம். கல்லூரியில் இரண்டு வருடங்கள் மூத்தவர் ஒருவரும் அப்போது சென்னையில்தான் இருந்தார். அவரையும் விடவில்லை. ஆங்கிலம், தமிழ் இரண்டிலுமே தீவிர வாசகர் அவர். கல்லூரியில் படிக்கும்போதே பல இலக்கியச் சிற்றிதழ்களையும், நவீன எழுத்தாளர்களின் படைப்புகளையும் எனக்கு அறிமுகப் படுத்தியவர் அவர்தான், கதையைப் படித்துவிட்டு உதட்டைப் பிதுக்கினார். ''ரொம்ப சாதாரணமான கதைதான். வித்தியாசமாக எழுதப் பார்" என்றவர் அதோடு நிற்காமல் "ஜேம்ஸ் ஜாய்ஸ்னு ஒருத்தர் எழுத்து படி. அதிலும் எழுதணும்னு நினைக்கிறவங்க அவரோட உலிஸிஸ் நாவல் பிரதி ஒண்ணு சொந்தமாக வைத்திருக்கணும்" என்று ஒரு தூண்டிலை போட்டு விட்டார். அன்று ஆரம்பித்தது எனது உலிஸிஸ் தேடல். கண்ணிலேயே படவில்லை. திருவல்லிக்கேணி நடைபாதையில் பழைய புத்தக வியாபாரி ஒருவர் மூலம்தான் ஞானம் கிடைத்தது. "என்னா சார் ரொம்ப நேரமாத் தேடறே. டைட்டில் சொல்லு. இருக்கா இல்லையான்னு சொல்றேன்". சொன்னேன். அலட்சியமாக ஒரு பார்வை பார்த்தார். "ஜாய்ஸா? ஜாய்ஸெல்லாம் நெறையப் பேரு வாங்க மாட்டாங்க சார். அப்படியே வாங்கினாலும் விற்க மாட்டாங்க. இங்கே தேடறது வீண் வேலை'' என்று என் தேடலுக்கு ஒரு தற்காலிக முற்றுப் புள்ளி வைத்தார். சில வருடங்களுக்குப் பிறகு நுங்கம்பாக்கத்தில் ஒரு பல்பொருள் அங்காடியின் நூல் பிரிவில் [லேண்ட்மார்க் என்று ஞாபகம்] உலிஸிஸ் கண்ணில் பட்டது. புத்தம்புது பிரதி. போட்டிருந்த விலையைக்

கொடுத்து கையகப் படுத்தி விட்டேன். அன்று இரவே வாசிக்க ஆரம்பித்து விட்டேன். அது ஆச்சு முப்பது வருடங்கள். இன்னும் நூறு பக்கங்கள் கூட வாசித்து முடிக்கவில்லை. [அதுவும் தொடர்ச்சியாக வாசிப்பது சாத்தியமில்லை என்ற நிலை உணர்ந்து அவ்வப்போது கையில் கிடைக்கும் பக்கத்தை வாசித்துதான் நூறு என்பதே] என்றாலும் உலிஸிஸ் பிரதி கையில் இருப்பதில் ஓர் அல்ப திருப்தி.

தற்செயலாக சில மாதங்களுக்கு முன் சென்னை சென்றிருந்தபோது அந்த கல்லூரி மூத்தவரைச் சந்திக்க நேர்ந்தது. கிட்டத்தட்ட நாற்பது வருட இடைவெளி என்றாலும் என்னால் அவரை அடையாளம் காண முடிந்தது. அறிமுகப் படுத்திக் கொண்ட பின்பு அவரும் என்னை அடையாளம் கண்டு கொண்டார். அவர் இப்போது பத்திற்கும் மேற்பட்ட தொழில்கள் நடத்தும் பெரும் தொழில் அதிபர். வருடத்தில் பாதி நாட்கள் உலகத்தில் வேறு ஏதேனும் பகுதியில்தான். பத்து நிமிடங்கள் பேசிக் கொண்டிருந்தபின் மெதுவாக உலிஸிஸை கையகப்படுத்திய செய்தியை சொன்னேன். வித்தியாசமாக என்னைப் பார்த்தவர் "உலிஸிஸா? கேள்விப்படாத பிராண்டாக இருக்கே. எந்த நாட்டுத் தயாரிப்பு?" நல்லவேளை ஜாய்ஸ் ஏற்கனவே இறந்து போய்விட்டார் என்று நினைத்தவாறே அவரோடு கை குலுக்கிவிட்டு விடை பெற்றேன். [அதற்கு மேல் பேசிக் கொண்டிருக்க அவருக்கு நேரம் கிடையாது] சென்னையில் இருந்து ஊர் திரும்பிய கையோடு உலிஸிஸை எடுத்து வைத்து இரண்டு பக்கங்களை வாசித்த பின்தான் மனம் ஒரு நிலைக்கு வந்தது.

★★★

1990 ம் வருடத்திற்கான நோபல் பரிசு பெற்ற லத்தீன் அமெரிக்க கவிஞர் ஆக்டேவியோ பாஸ். [1914 - 1998] மெக்ஸிகோவில் பிறந்த பாஸ் ஸ்பெயின், அமெரிக்காவெல்லாம் சுற்றி விட்டு மெக்ஸிகோவின் வெளி உறவுத் துறையில் சேர்ந்து பணியாற்றி பல தேசங்களில் பணி புரிந்தவர். இந்தியாவிலும் 1962ல் தூதராக பணி புரிய வந்தார். 1968ல் மெக்ஸிகோ அரசு மாணவக் கிளர்ச்சியாளர்களை படுகொலை செய்ததைக் கண்டித்து பாஸ் அந்தப் பதவியைத் துறந்தார். அவரது இந்திய வாழ்க்கை காரணமாக அவரது பல படைப்புகளில் இந்திய சிந்தனைகளின் தாக்கம் தூக்கலாகவே காணப் படும்.

கவிதையைப் பற்றி பாஸின் கருத்து "கவிதையானது வேற்றுக்குரல். அது வரலாற்றின் குரலோ, அல்லது எதிர் வரலாற்றின் குரலோ அல்ல. எனினும் கவிதையில் வரலாறு எப்போதும் வேறுபட்ட ஒன்றையே சொல்லிக் கொண்டிருக்கும்."

"ஸ்பரிசம்" எனும் அவரது கவிதையின் தமிழாக்கம்...

எனது கைகள்
உனது உயிரின் திரைகளைத் திறந்து
உடுத்துகிறது உன்னை
இன்னும் கூடுதலாகும் நிர்வாணத்தில்
உனது உடலின் உடல்களைக் களைந்து
எனது கைகள்
கண்டு பிடிக்கின்றன உனது உடலுக்கென வேறு உடலை.

[மொழிபெயர்ப்பு பிரம்மராஜன்]

★★★

நாம் சந்தோஷ் என்ற புனைப்பெயரில் கவிதைகளும், கதைகளும் எழுதும் சண்முக. விமல்குமாரின் தேர்ந்தெடுக்கப்பட்ட 66 கவிதைகள் அடங்கிய முதல் தொகுப்பு "சொல் வெளித் தவளைகள்'' சொன்மை பதிப்பக வெளியீடாக வந்துள்ளது. தலைப்பிடப்பட்டதும், படாததுமான கவிதைகள் குறித்து தனியாக விரிவான வாசிப்பு அனுபவத்தைப் பகிர்ந்து கொள்ள ஆசைதான். அடுத்த இதழ் தயாராவதற்குள் எழுதிவிட வேண்டும். அடிப்படையில் தமிழ்த்துறை சார்ந்தவர் என்பதால் சங்கப் பாடல்களின் தாக்கம், தொன்மங்கள், அரசியல் பகடிகள் கலந்த தனித்துவமான ஆனால் எளிமையான நடையில் எழுதப் பட்டுள்ள தொகுப்பில் இருந்து ஒரு கவிதை மட்டும் இங்கே உங்கள் வாசிப்புக்கு "காந்தி குரங்குகளின் இருத்தல்" எனும் தலைப்பில் உள்ள கவிதை.

காற்று போல் ஆடி இலைகளென சொல் உதிர்க்கும்
நெடுமரத் தலைவனின் உடலெல்லாம் பொய்கள்
கிளைவாழ் குரங்குகள் செவி, கண் பொத்தி
வாய் வழிப் புசிக்குது பார் வயிற்றுக்கே பாவம். ●





# காணிநிலம்

## சிறுகதைப் போட்டி 2018

'காணிநிலம்' இலக்கியக் காலாண்டிதழ் ஓராண்டு நிறைவை முன்னிட்டு நடத்தும் சிறுகதைப் போட்டி ஒன்றை அறிவிப்பதில் பெரு மகிழ்ச்சி கொள்கிறோம்.

- கதைக்களம் எது குறித்தும் இருக்கலாம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- சிறுகதைப் போட்டிக்கு அனுப்பப்படும் கதைகள் காணிநிலம் இதழில் ஐந்து பக்கங்களுக்கு மிகாமல் இருக்க வேண்டும்.
- சிறுகதைகள் இதுவரை எந்த வகையிலும் பிரசுரமாகாததாகவும், சொந்தக் கற்பனையாகவும் இருக்க வேண்டும். இதற்கான உறுதிமொழியை சிறுகதையுடன் இணைக்க வேண்டும்.
- சிறுகதையுடன் முழு அஞ்சல் முகவரியும், தொடர்பு எண்ணும் அனுப்பப்பட வேண்டும்.
- சிறுகதைகள் யுனிகோட் எழுத்துருவில் தட்டச்சு செய்து kaaninilam2018@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பப்படுவதோடு, தாளின் ஒருபுறம் மட்டுமே எடுக்கப்பட்ட பிரதி ஒன்று கீழ்கண்ட அஞ்சல் முகவரிக்கும் அனுப்பப்பட வேண்டும்.
- ஆசிரியர் குழு – காணிநிலம் இலக்கிய இதழ், 29, 'தமிழ் அகம்' வி.ஐ.பி. நகர், தியாகராஜ நகர், திருநெல்வேலி -11, அ.எண் 627 011.
- தேர்ந்தெடுக்கப்படாத சிறுகதைகளை திருப்பி அனுப்ப இயலாது.
- பரிசுக்குரிய சிறுகதைகள் தேர்வு செய்யப்பட்டதும், உரியவருக்குத் தெரிவிக்கப்படும்.
- பரிசு பெற்ற சிறுகதைகளும், பிரசுரத்துக்கு தேர்வு செய்யப்பட்ட கதைகளும் காணிநிலம் இதழில் வெளியாகும்.
- சிறுகதைகள் அனுப்ப கடைசி நாள் – **15.12.2018.**

| முதல் பரிசு | 2ஆம் பரிசு | 3ஆம் பரிசு |
|---|---|---|
| ₹1000 | ₹750 | ₹250 |

# நெல்லையில் காந்தி ஓவியக் கண்காட்சி



காந்தி ஜெயந்தியை முன்னிட்டு செப்டம்பர் 28 முதல் 30 வரையில் பாளையங்கோட்டை அரசு அருங்காட்சியகத்தில் நடைபெற்ற ஓவியக் கண்காட்சியில் இடம்பெற்ற காணிநிலம் ஆசிரியர் குழுவைச் சேர்ந்த ஓவியர் சண்முகம் அவர்களின் காந்தி ஓவியங்களில் சில...










